பற்றியும் எண்ணிப் பார்த்திட வேண்டும்-நீதியான தீர்ப்பு நமக்குக் கிடைத்திடச் செய்யும் வழிவகை யாது என்பது பற்றியும், நாம் கலந்து பேசித் தீர்மானிக்க வேண்டும்.

மாநில மாநாடு அத்தகையதோர் மன்றத்தில் நாமனைவரும் கூடி இருந்து, பிரச்சினைகளையும் நிலைமை களையும் ஆராய்ந்து முடிவுகள் காணும் வாய்ப்பாகும்.

எனவே, திராவிட விடுதலையில் நாட்டம் கொண்டுள்ள எவரும், எந்தக் காரணம் கொண்டும், இந்த வாய்ப்பினை இழந்துவிடக் கூடாது.

தீர்ப்பளிப்போரின் கெடுமதி நமக்குக் கேடு பயப்பதாக உளது என்றாலும், காலம் எனும் பெருமன்றம், உயர்மன்றம் ஒன்று உளது - அங்கு எத்தகைய அநீதியும் துடைக்கப்பட்டு விடும் - அக்ரமம் அழிக்கப்பட்டே தீரும் - நீதி நிலை நாட்டப்படும். வரலாறு அத்தகைய ”நீதி நிலைநாட்டப்பட்ட’ நெறி விளக்க நிகண்டுதானே.

வகுப்பு நீதி சாயக்கண்டு வேதனை அடையும் மாணவர்கள் வகுப்பு நீதி மாயக்கண்டு திகில் கொள்ளும் அதிகாரிகள்

விலைவாசி விஷமென ஏறுவது கண்டு விம்மிடும் நடுத்தர மக்கள்.

சோற்றுக்கு வழியின்றி வேதனைப்படும் ஏழை பாழைகள். நூலுக்குத் திண்டாடி, கூலிக்குப் போராடி, வாழ்வுக்குத் திண்டாடும் நெசவாளர்கள்.

அகவிலையால் அவதிப்பட்டு தேய்ந்து போகும் தொழிலாளர்.

கோழியுடன் எழுந்து கோட்டான் கூவும்போது தூங்கி, காலமெல்லாம் உழைத்து, கால்வயிற்றுக் கூழுக்குக் கலங்கித் தவிக்கும் உழவர்கள்.

மக்கள் பணியாற்றச் சென்று அடக்குமுறையால் தாக்கப் பட்டு, வதைக்கப்படும் பொதுநல ஊழியர்கள்.

இவர்கள் சார்பாகப் பேச, நீதி கேட்க, உரிமைக் கிளர்ச்சி செய்ய, நேர்மையாளர்கள், அறநெறி கொண்டோர் யாரும் இல்லையா திராவிடத்தில்?

ஆட்சியாளர்களின் போக்கைக் கண்டிக்கும் ஆண்மை யாளர்கள் இல்லையா?

இம்மென்றால் சிறைவாசம் ஏனென்றால் வனவாசம் என்ற முறையில் நிலைமை இருக்கக் கண்டு அச்சமா?

ஆமையாய், ஊமையாய் வாழ்வதா தமிழர் வீரம்?

உரிமை வேட்கை கொண்டோரே! ஊருக்குழைக்கும் உத்தமர்காள்! என்ன வழிகாட்டப் போகிறீர்கள்? திரண்டெழுந்து வருகிறார்கள் திராவிடப் பொருங்குடி மக்கள், திருச்சியில், மே 17, 18, 19, 20.

திட்டம் தீட்டித் தர வாரீர்!
திருநாட்டை மீட்டிடும் தூய பணியாற்ற வாரீர்!
திராவிடம் அழைக்கிறது.
மே, 17, 18, 19, 20 திருச்சியில் மாநில மாநாடு.

அரும்பு கோணிடினும் மணம் குன்றாதன்றோ! கரும்பு கோணிடினும் சுவை கோணுமோ! இரும்பு கோணியே யானையை அடக்கும் ஆயுதமாகிறது. அதுபோல நமது கழகம், ”அகில உலகு’ அறிந்ததாக, விளம்பர வனப்புகள் பெற்றதாக இல்லை எனினும், அது கூறும் நீதி நிலைத்தே நிற்கும். நிதி குறைந்திடினும் நீதி குறையாது. நீளப் புகழ் பரப்பி, நெடுமரத்தில் கொடி கட்டி, நிகர் இல்லை என்று நிகண்டு தீட்டி நீட்டிடினும், நீதிதனை மறக்கும் கட்சி, நின்ற சுவர் மாரியில் சரிந்து வீழ்வதே போல், சடுதியில் சாய்ந்தே தீரும்.

தங்கத்தால் கோட்டை கட்டி, வைரம் இழைத்த வாயில் அமைத்து, அதனை எதிர்த்து எவரும் வராதபடி, சுற்றிலும் ஆத்திகமெனும் ஆழி அமைத்து, மத குருமார்களெனும் முதலைகளை அதிலே வளர்த்து, கோட்டைமீது பரம்பரை எனும் கொடிமரம் நாட்டி, அதிலே படாடோபம் எனும் கொடியைப் பறக்கவிட்டு, பார்ப்போரின் கண் கூசும் பளபளப்புடன், கேட்போர் செவி குடையும் அட்டகாசத்துடன் ஆண்ட கொடுங்கோலனெல்லாம், பகல் பட்டினிகளால் பஞ்சை பனாதைகளால், நொந்த உள்ளத்தினரால், தாக்குண்டு, தகர்ந்து, தரைமீது சிதறிச் சிதறி வீழ்ந்து மண்மேடுகளானது, புராணமல்ல, வரலாறு. அதனை அறிந்தோர் நாம். நாம் கூடுகிறோம், திருச்சியில்!

ஏன் உங்கட்குமட்டும் இந்தத் தொல்லை? எப்படி எதிர்த்து நிற்பீர்கள் அவ்வளவு பெரிய ஆற்றலை? வேண்டுவதைக் கேட்டுப் பெற வாய்ப்பு இருக்கிறதே?

வெண்சாமரம் வீசுவோருக்கு வாழ்வில் விருந்தே கிடைக்கிறதே? அதை விட்டு, ஏன் ஆபத்தான வேலையில் ஈடுபடுகிறீர்கள் என்று காங்கிரசின் புதிய காதலர்கள், கேட்கக்கூடச் செய்கின்றனர்.

கூண்டிலடைப்பட்ட பஞ்சவர்ணக்கிளிக்கு, பழமுதிர் சோலை, பசும்புற்றரைக்கடுத்துள்ள சாலை, பழைய கட்டிடத்தின் சாளரம், தளிர், பூ, செங்கனி ஆகியவற்றின் மீதுதானே கருத்து இருக்கும். சிறகை அடித்தடித்துக் கூண்டுக்குள் பறந்துவிழும் தத்தை, நித்த நித்தம் தான் பிடிபடுமுன் குலவிய இன்பக் காட்சிகளை எண்ணி எண்ணியே ஏங்கும்.

கொவ்வைக் கனி தருவாள் ஓர் கோகிலம்; கொஞ்சுவாள் மற்றோர் குமரி; தங்க வட்டிலில் பால் தருவாள் இன்னோர் தையல். சுவைமிகு பண்டமும் தந்து பாவையர் அதனெதிர் நின்று முல்லை காட்டி முறுவலித்தாலும், கிளியின் கருத்து மாறாது, பழைய நினைவுகொண்டு, பதறும்; துடிக்கும்; விடுதலை எப்போது என்று கேட்பதுபோலக் கூண்டுக்குள்ளேயே சிறகடித்துக் கிடக்கும்.

கிளியின் போக்கு இவ்வண்ணம் இருந்திடக் காண்கிறோம். நாமோ, ”அறங்கிடந்த நெஞ்சும், அருளொழுகு கண்ணும், மறங்கிடந்த திண்டோள் வலியும்'' கொண்ட மரபினர். நாமா, ஆமையாய் ஊமையாய், ஆளடிமை செய்யும் அடிமையாகிக் கிடப்பது!

உடலெங்கும் இரத்தமயம்! உடையோ சுக்குநூறு! வடுக்களிலிருந்து ஒழுகும் குருதியைத் துடைத்திடவும் கரம் பயன்படவில்லை! தூக்க முடியவில்லை- கரத்திலேயும வடு! எனினும் அந்தப் போர் வீரன் முகத்திலே புன்னகை பூத்திருக்கிறது. ஏன்? அவன் காலடியிலே, வாயில் குருதியொழுக பற்கள் கீழே உதிர்ந்து கிடக்க, தோல் கிழிந்து, புலியொன்று பிணமாகக் கிடக்கிறது. புலியுடன் போரிட்ட சிங்கம் அவன்! புலியின் பொல்லாப் பற்கள் அவன் உடலெங்கும் புண்ணை ஏற்படுத்திவிட்டன. நகத்தால் கீறியும், பற்களால் கடித்தும், உடலால் மோதியும், புலி, அவன் உயிர்குடிக்கத் துணிந்தது. அவன் தனியன்! இளைஞன்! ஆனால் தமிழன்!! எனவே அவன் புலியினைக் கட்டிப் புரண்டான் - அதன் இடியையும் கடியையும் பொறுத்தான். வாள் ஒடிந்தது- வீரனின் மனம் ஒடியவில்லை. கரத்தால் குத்தினான்-வாயைப் பிளந்தான் - வாலைப் பிடித்திழுத்து, புலியைத் தூக்கிச் சுற்றினான் கரகரவென்று.

ஓங்கி அடித்தான் பாறைமீது, கோரக் கூச்சலிட்டுச் செத்தது. குற்றுயிராகக் கிடக்கிறான் குமரன்! அவனைக் கண்டோர், வியந்து ”வேங்கையைக் கொன்ற வீரனே, எம் தோழனே, உன்னுடன் பிறந்ததற்காக நாங்கள் உள்ளம் பூரிக்கிறோம். உன்னை, எப்பாடுபட்டேனும், எமது இன்னுயிரை ஈந்தேனும், பிழைத்திடச் செய்வோம்’’ என்று கூறிப் பெருமைப் படுவர்.

அஃதேபோலத் தம்பி, நெஞ்சில் உரம் உண்டு; கொள்கைக்காக, கொடுமைகளைத் தாங்கிக்கொள்ளும் திறம் உண்டு; அறம் வெல்லும் என்ற நம்பிக்கை எமக்குண்டு; அதற்காக எமது ஆவியைக் கேட்டினும் அளித்திடும் திடமனமும் உண்டு என்று கூறி, செயலிலும் செம்மல்களாகி, மாற்றாரின் சித்திரவதைக்கு ஆளாகினாலும் சித்தம் கலங்காமல் செருமுனையில் நின்றோமானால், இன்று ஆரியத்துக்கும் வடநாட்டாட்சிக்கும் அடங்கிக்கிடப்போரெல்லாம் பெருமிதம் கொள்வர்-பீதி அழிந்தொழியும், அவர்களும், நமது நெறி நிற்கும் துணிவு பெறுவர்-

நாடறியா நடராசன் நமது தமிழ் காக்க நானுழைப்பேன்!- என்று கூறி நடந்தான் சிறைச்சாலை நோக்கி! சென்று வா மகனே! வென்று வா! என்று செப்பினார் அவர் தந்தை. பாழுஞ் சிறையிலே, படுத்த படுக்கையிலே, பைந்தமிழ் வீரன், நோயுற்று நொந்தான். மரணம் நேர் வந்து நின்று அணைத்துக் கொண்டது. புகழ் மணம் பரப்பிக் கொண்டு புதல்வன் சிறையினின்றும் வெளிவருவான் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தார் வீரனின் தந்தை. மாடியில்லா மண் வீட்டில் பிணம் வந்து சேர்ந்தது! தமிழரின் கண்களிலே வெள்ளம் புரண்டது.

தாலமுத்து என்றோர் தீரன் தீந்தமிழைத் தாக்க ஒரு தில்லுமொழி துணிந்ததா என்றுரைத்து நுழைந்தான் சிறைக்குள்-பிணந்தான் வெளியே எடுத்தெறியப்பட்டது. முழக்கமிட்டுக்கொண்டு சிறைக்குள்ளே நுழைந்தான், மூச்சு போய்விட்டான பிறகே வெளியே அனுப்பினர். இன்னலால் தாக்குண்டாள் இளம் மனைவி. இனி உலகே எனக்கோர் சிறையன்றோ என்று கேட்டு கண்ணீர் வடித்து நின்றாள். சூழ இருந்தோர் புழுப்போல் துடித்தனர்.

தம்பி! இந்த வீரமும் தியாகமும் வீண் போயிற்றோ! இல்லையே. கட்டாய இந்தி கல்லறை சென்றே விட்டது! கபட இந்திதான் காலாட்டம் நடத்துகிறது!

தாலமுத்துவும் நடராசனும், எந்த கட்டாய இந்தியை எதிர்த்தொழித்திட நடத்தப்பட்ட அறப்போரில் ஈடுபட்டு உயிர் நீத்தனரோ, அந்தக் கட்டாய இந்தியைப் புகுத்திய, ஆச்சாரியார் இன்று, இந்தி வெறியை, இந்தி ஆதிக்கத்தைக் கண்டிப்பதுடன், பொது மொழியாக இருக்கும் ஆற்றல் இந்திக்கு இல்லை, ஆங்கிலமே பொது மொழியாதல் வேண்டும் என்று எடுத்துக் கூறிடவும், நம்மை எல்லாம் அழைத்துப் பேசிடவும் முன்வந்துள்ளார் என்றால், வீரம் வீண்போயிற்று என்றா பொருள்! தியாகம் ஒளி விளக்காகிக் காட்டுகிறதே இன்று.

நாமும், தம்பி! நமது ஆற்றல் மூலம், தியாகத்தின் மூலம், விடுதலை விளக்கு ஏற்றி வைத்திட வேண்டும்.

ஏறத்தாழ ஆறாயிரவர் நம்மில் சிறை சென்றவர்களாகி விட்டோம்.

நூற்றுக்கணக்கானவர்களுக்குத் தடியடியும் கிடைத்து விட்டது.

நமது தோழர்களிலே சிலர், துப்பாக்கிக்கும் பலியாகி விட்டனர்.

ஆடவரும் கண்டு அஞ்சத்தக்க ஆற்றலைக் காட்டும் ஆரணங்குகள் நமது அணிவகுப்பில் உளர்.

எதையும் தாங்கிக்கொள்ளலாம், அண்ணா, வேல் பாயட்டும் விலாப்புறத்தில், வாள் வீசட்டும் கரத்தில், கழுத்தில், ஆனால் வன்கணாளர் வீசும் இழி மொழியை, பழிச் சொல்லை எப்படித் தாங்கிக்கொள்வது என்று துவக்கத்திலே கேட்டுக் கொண்டிருந்தோரெல்லாம் கூட, இன்று, எதையும் தாங்கும் இதயம் உண்டு என்பதைக் காட்டி விட்டனர்.

எனவே தம்பி, விடுதலைக் கிளர்ச்சியிலே வெற்றி பெறுவதற்கான எல்லாம் நம்மிடம் நிரம்ப இருக்கிறது; நாட்டிலே காணக்கிடக்கும், நயவஞ்சகம், ஏமாளித்தனம், ஆகியவற்றினுக்கு மட்டும் அஞ்சாமல், அளிக்கப்படும் அக்ரமத் தீர்ப்புகளை மாற்றி அமைத்திடும் வழி அறிவோம் என்று சூள் உரைத்து அறப்போரில், ஈடுபடுவோமானால், நிச்சயம் வெற்றி பெறுவோம் என்பது திண்ணம்.

இந்த உறுதியைக் காட்ட உள்ள உரம் படைத்தோரை, உன் உடன்பிறந்தோரை,

உடைமை போயினும், உயிரே போவதாயினும் உரிமையை மட்டும் இழந்திடமாட்டோம் என்று முழக்கமிடும் விரத்தோழர்களை, உடனழைத்துக் கொண்டு, கோழையையும் வீரனாக்கும் பார்வையுடன், கொல்லும் புலியும் அஞ்சத்தக்க நடையுடன், அரிமாபோல் நோக்கம் கொண்டு, அருமைத் தம்பி! திருச்சிக்கு வந்து சேர். 17, 18, 19, 20 திருச்சி வருவதற்கு முன்பு உனக்கு, நீ இருக்குமிடத்திலும், உலவும் இடங்களிலும் நிரம்ப வேலை இருக்கிறது. திருச்சியில் நடைபெறும் மாநில மாநாடுபற்றி எங்கும் எடுத்துக் கூறவேண்டும்-எல்லா வகையாலும் நாடறியச் செய்திட வேண்டும்.

பெரிய "இதழ்கள்' ஒரு வரியும் எழுதா!

ரேடியோவில் மூச்சு பேச்சு இராது.

இரயில் நிலையங்களிலே விளம்பரப் பலகைகள் கிடையாது.

உன்னைத்தான் நம்பிக்கொண்டிருக்கிறார் - நமது பொதுச் செயலாளர். எனவே, பேச்சும் எழுத்தும், மாநில மாநாடு பற்றியே இருத்தல் வேண்டும்! பட்டிதொட்டிகளிலும் சேதி பரவிடச் செய்ய வேண்டும். எத்தனை பெரிய இருட்டடிப்பையும் கிழித்துக்கொண்டு வெளிக்கிளம்பும் ஆற்றல் உனக்குண்டு. எனவே தம்பி, இன்றே புறப்படு நண்பர்களைக் காண, உற்சாகத்துடன் எடுத்துக் கூறு மாநில மாநாடு பற்றி. எம்மைச் சரியாக அறிந்துகொள்ள வேண்டுமா, வாருங்கள் திருச்சிக்கு வந்து காணுங்கள் எழுச்சியை; எமது பிரச்சினைகளைப் புரிந்துகொள்ள ஆவல் கொண்டோரே, திருச்சி வருவீர், எமது தோழர்கள் தரும் தெளிவுரையைச் செவி மடுப்பீர்; இதுகளா என்று ஏளனம் பேசுவோரே, இதுகள் சாதித்திருக்கும் செம்மையை அறிந்துகொள்ளத் திருச்சி வாரீர் என்று அனைவரிடமும் எடுத்துக் கூறு. தம்பி! நமது மாநாடு, ஓர் பாசறை மட்டுமல்ல- ஓர் பல்கலைக் கழகம் என்பதையும் அவர்கட்கு எடுத்துச் சொல்லு. சாக்ரடிஸ் முதல் ஷா வரையில் உலகின் பல்வேறு பாகங்களிலே வாழ்ந்து, உலகை வாழவைத்த உத்தமர்கள் பற்றிய விரிவுரைகளென்ன, விஞ்ஞான வித்தகர்கள் பற்றிய தெளிவுரைகளென்ன, விடுதலை வரலாறு பற்றிய விளக்க உரைகளென்ன-இவை யாவும், நாலு நாட்கள் நடைபெறும் நமது மாநாட்டிலே, தித்திக்கும் தமிழை எத்திக்கும் பரப்பிடும் சொல்லேர் உழவர்கள் எடுத்துரைத்திடப் போகும் சிறப்பினை

அவர்கட்கெல்லாம் எடுத்துக் கூறு.

காவியக் கனிரசமும், ஓவியச் சிறப்பும் உண்டு என்பதனை எடுத்தியம்பு.

கருத்தைத் தெளிய வைத்திடும் தேனமுதை கலை வல்லோர் இசை மூலமும் நாடக மூலமும் தர இருக்கும் நேர்த்தியை எடுத்துக் கூறு.

எல்லாவற்றினுக்கும் மேலாக, எந்தையர் நாடு இன்றுள்ள இழிநிலை போக்கப்பட்டு, தனி அரசு பெற்று, தரணியில் ஓர் திலகமெனத் திகழ்வதற்கான வழிவகை பற்றிய பரணி பாடிட ஓர் படை திரண்டு நிற்கும் காட்சியின் மாட்சியினை எடுத்துக் கூறு.

நாட்கள் அதிகமில்லை தம்பி! நினைவிலிருக்கட்டும்.

பல செலவினங்களை இப்போதே சுருக்கிக்கொள்ள வேண்டும்-வசதிகளைத் தேடிப் பெறவேண்டும்.

திரண்டெழுந்து வந்து, இருண்ட மனத்தினரும் அறிவுச் சுடர் பெறுமளவுக்கு, மாநில மாநாட்டை வெற்றிகரமாக்கி, திராவிடத்திலோர் புத்தொளி எழச் செய்யும் பெரும் பொறுப்பு உன்னிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது.

ஒளி படைத்த கண்ணினாய்,
வா, வா, வா!
உறுதிகொண்ட நெஞ்சினாய்,
வா, வா, வா!

என்று உரிமையுடன் அழைக்கிறேன்.

தமிழுண்டு தமிழ் மக்கள் உண்டு
இன்பத் தமிழுக்கு நாளும் செய்வோம்
நல்ல தொண்டு

என்ற பண் எழுப்பி, படை திரட்டிக்கொண்டு வா.

பாழ்படும் பழமை சூழ்வது திறமா?
பகுத்தறிவால் நலம் வகுப்பது திறமா?

என்று நாட்டிலே இன்னமும் நல்லறிவுப் பிரசாரத்தைக் கேட்டுத் தெளிவு

பெறாமலிருக்குமிடங்களிலெல்லாம், சென்று கேட்டு-சிந்தனையைக் கிளறிவிட்டு, அவர்களை எல்லாம் திருச்சிக்கு வருக! திரு இடம் இதுவென அறிக என்று கூறி அழைத்து வா.

நல்ல தீர்ப்பு நமக்குக் கிடைக்க வேண்டும் தம்பி அதைப் பெற்றுத்தர, உன்னால்தான் முடியும். அந்த நோக்குடன் திருச்சி மாநாட்டுக்கு வந்து எழில் காட்டி, எழுச்சியூட்டி, இன்பத் திராவிடம் காண்பதற்கான வழிவகை தீட்டிச் செயலில் ஈடுபட, உறுதியுடன் வந்து சேர வேண்டுகிறேன்.

நமது நோக்கம் தூய்மையானது - வழக்கு சிக்கலற்றது - ஆதாரம் அப்பழுக்கற்றது; முயற்சியில் நாம் சிறப்புடன் இருக்கிறோம் என்பதை எடுத்துக் காட்டும் வாய்ப்புதான் திருச்சி மாநாடு - மறவாதே!

”எல்லார்க்கும் தேசம்,
எல்லார்க்கும் உடைமை எலாம்
எல்லார்க்கும் எல்லா
உரிமைகளும் ஆகுகவே
எல்லார்க்கும் கல்வி
சுகாதாரம் வாய்த்திடுக
எல்லார்க்கும் நல்ல இதயம்
பொருந்திடுக
வல்லார்க்கும் மற்றுமுள்ள
செல்வர்க்கும் நாட்டுடமை
வாய்க்கரிசி என்னும்
மனப்பான்மை போயொழிக
வில்லார்க்கும் நல்ல நுதல்
மாதர் எல்லார்க்கும்
விடுதலையாம் என்றே
மணிமுரசம் ஆர்ப்பீரே.’’

அன்பன்,
அண்ணாதுரை

# 49. அரிமா நோக்கு !

தூய்மையும் தூற்றலும் -
சுதந்திரம் பெற்ற நாடுகள்-
திராவிட நாடு.

தம்பி,

ஒரு கருத்தளிக்கும் காட்சி காண அழைக்கிறேன் - பல நூற்றாண்டுகட்கு முன்பு நடைபெற்றதோர் காட்சி. எனினும் இன்றும் எனக்கும் உனக்கும், ஏன், கண்ணியத்தைக் கடைப்பிடிக்கும்போது என்ன கஷ்ட நஷ்டம் ஏற்பட்டாலும் தாங்கிக்கொள்ள வேண்டும், எத்துணை மன எரிச்சலூட்டப் பட்டாலும் சகித்துக்கொள்ள வேண்டும் என்ற உறுதியுடன் பணியாற்றும் அனைவருக்குமே மகிழ்ச்சியும் நம்பிக்கையும் தரத்தக்கதோர் கருத்தளிக்கும் காட்சி.

பொன்னிற மேனியன், அருளொழுகும் கண்ணினன், சித்தார்த்தனாகப் பிறந்து புத்தனான பெரியோன், அமைதியாக நிற்கிறார் - எதிரே, உலகமே என் கால் தூசுக்குச் சமம் என்று கூறுமளவு ஆணவம் கக்கும் கண்கள் கொண்ட வேத மார்க்கத்தவனொருவன், ஆத்திரத்துடன் நின்றுகொண்டிருக்கிறான்.

வேத மார்க்கம் அழிந்துபட்டுக்கொண்டு வந்த காலம் அது. கபில வஸ்துவிலிருந்து கிளம்பிய கருத்துக் கதிர், இருட்டறிவை விரட்டி அடித்துக்கொண்டிருந்த வேளை. வேள்விகள் வீண் ஆரவாரம், வேத ஒலி வெற்றுரை, சடங்குகள் சத்தற்றவை என்ற எண்ணம், மக்களிடம் ஆட்சி செய்யத் தொடங்கிவிட்ட காலம், இந்த மாறுதலுக்குக் காரணமாக இருந்த புத்தர், அவர் எதிரே இந்த மாறுதலின் காரணமாக மதிப்பிழந்த மமதைக்காரன். புத்தருடைய உள்ளத்திலே ஓர் உக்கிரமான புயல் கிளம்பும், கடுஞ்சொற்களை அவர் அள்ளி வீசுவார், உடனே காகூவெனக் கலாம் விளைவிக்கலாம் என்பது அக் கபடனின் கருத்து. அக் கசடன் எண்ணியபடியா புத்தர் இருப்பார்! அதற்கா அவர் புத்தர் ஆனார்!

”அன்பரே! ஒன்று கேட்கிறேன். ஒருவர் மற்றொருவருக்கு அன்பளிப்பாக ஒரு பொருளை அளிக்கிறார். ஆனால் மற்றவரோ அதை ஏற்றுக்கொள்ள மறுத்துவிடுகிறார். அப்போது அந்தப் பொருள் யாருக்கு உரியது?’’ என்று புத்தர் கேட்டார்.

வேத மார்க்கத்தவனுக்கு இந்தக் கேள்வியே வேடிக்கையாகப் பட்டது. வேதத்தின் உட்பொருள்பற்றிய கேள்விகள் உபநிஷத்திலே சில சந்தேகங்கள், இப்படி ஏதேனும் கேள்வி கேட்கக்கூடாதா - என் பாண்டித்தியத்தைக் காட்டி இருப்பேனே! இந்தப் புத்தர், சிறுவர்களுக்கும் எளிதில் விளங்கும் விஷயமாக ஒரு கேள்வி கேட்கிறாரே! சேச்சே! என்ன கேவலம் இது - என்று எண்ணிக்கொண்டு அலட்சியமாக

”ஒருவர் தந்த பொருளை மற்றவர் வேண்டாம் என்று கூறிவிட்டால், அப்பொருளை அளிக்க முற்பட்டவருக்கே அந்தப் பொருள் உரிமையாகும்’’ என்று பதிலளித்தான்.

”சரி இப்போது நீர் எனக்கு அளித்த வசைமொழிகளை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. அதனால் அதை நீரே வைத்துக் கொள்ளும்’’ என்றார் புத்தர். வேத மார்க்கத்தவன் திகைத்துப் போனான் - வெட்கமுமடைந்தான் - ஏனெனில் தந்த பொருளை பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டால், தந்தவருக்கே அப்பொருள் மீண்டும் வந்து சேர்ந்துவிடும் என்ற தத்துவத்தின்படி, புத்தர்மீது புரோகித மார்க்கத்தான் பூட்டிய வசை மொழிகள் அத்துணையும் திரும்ப அவனிடமே அல்லவா வந்துவிடுகின்றன! அந்த வசை மொழிகளுக்கு அவனே அல்லவா உரிமையுள்ளவனாகி விடுகிறான். எவ்வளவு கேவலமான வசைமொழிகளை வீசினான்.

கெடுமதியாளன்
மதத் துரோகி
வேத நிந்தகன்
நாத்திகன்
நாசமாய்ப்போவான்
நரகம் சேர்வான்

அவன் வீசிய வசைமொழிகளிலே, இவை தரத்தில் சிறிதளவு உயர்ந்தவை! இவையும் இவற்றினைவிட மட்டமான இழி மொழிகள் அத்தனையும், புத்தர் திருப்பி அல்லவா தந்துவிட்டார்! யாரிடமிருந்து கிளம்பினவோ, அவனிடமே அல்லவா அவை வந்து சேர்ந்துவிட்டன! வெட்கப்பட்டான் – அது மட்டுமல்ல - புத்தருடைய பேரறிவு, அவன் மனதை வென்று விட்டது. எத்துணை அடக்கம்? என்ன விநயம்? எவ்வளவு திறம்பட என் கேவலத் தன்மையை நானே உணரும்படிச் செய்துவிட்டார்! இவர் உத்தமர், ஐயமில்லை! உயர்ந்தோர், அட்டியில்லை! புத்தர் இவரே, புவி எங்கும் இதனை எடுத்துரைப்பேன் என்றெல்லாம் அவன் உள்ளம் எண்ணிற்று.

தம்பி! அடிக்கடி என்னிடம் நீ மல்லுக்கு நிற்கிறாய் - மாற்றார்கள்- உற்றார்களாக இருக்கவேண்டியவர்கள் கூட - தம் மனம்போன போக்கிலே நம்மைக் கேவலமாகப் பேசுகிறார்கள் - பழிச்சொற்களை வீசுகிறார்கள்- இழிவாகப் பேசுகிறார்கள் - கேட்கச் சகிக்கவில்லை - வேதனையாகவும் இருக்கிறது - ஏன் நாம் பதிலளிக்கக்கூடாது - ஏன் நாம் அவர்களின் குட்டுகளை உடைத்திடத் தயங்க வேண்டும் - அவர்களிடம் உள்ள கொள்கைக் குழப்பங்களையும் முரண்பாடுகளையும், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் கேவலப் போக்கினையும், சொல் வேறு செயல் வேறாக இருக்கும் தன்மையினையும் ஏன் அம்பலப்படுத்தக் கூடாது என்றெல்லாம் கேட்கிறாய் அல்லவா! எனக்கு, நான் இப்போது உனக்குக் காட்டினேனே காட்சி, இதிலே உள்ள கருத்துத்தான், வேதனை பிறக்கும்போதெல்லாம் துணை நிற்கிறது.

நமது உள்ளத்தில் தூய்மை இருந்தால், தூற்றல்பற்றி நமக்கென்ன கவலை - அது நம்மை என்ன செய்துவிடும்?

தம்பி! தூற்றல் நம்மை என்ன செய்துவிட்டது? நம்முடைய எந்த முயற்சியைக் குலைத்துவிட்டது? எந்த வேலையைக் கெடுத்துவிட்டது? எந்தத் திட்டம் பட்டுப்போயிற்று? வளர்ச்சி பாழ்பட்டதா-கவர்ச்சி கெட்டொழிந்ததா? தூற்றுவோர் தூற்றித் தூற்றி, தமது தூற்றல் ஆற்றலற்றுப் போவது கண்டு மனம்புழுங்கி மேலும் தூற்றிக்கொண்டே காலம் கடத்தி வருகிறார்களே தவிர, இந்தத் தூற்றலின் காரணமாக, நாடு, நம்மிடம் காட்டவேண்டிய

நம்பிக்கையைக் குறைத்துக் கொண்டதா? ஆதரவும் அன்பும் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டு வருவதைத்தான் காண்கிறோமே தவிர, பரிவும் பாசமும் வளரத்தான் காண்கிறோமே ஒழிய, நமக்கு என்ன குந்தகம் ஏற்பட்டுவிட்டது? ஒன்றுமில்லை.

“போதுமா, போதுமா?’’ என்றுதான் கேட்கிறார்கள். மிகப் பெரிய அளவில், திருச்சியில் தோழர் சாம்புவின் மேற்பார்வை யிலே போடப்பட்டு வரும் கொட்டகையைக் கண்டு.”எதற்காக இவ்வளவு பெரிய கொட்டகை?’ என்று எவரும் கேட்கக் காணோம். நமது வளர்ச்சி, தூற்றலால் துளைக்கப்பட்டிருந்தால், சாம்புவுக்கு இத்தனை பெரிய அல்லல் ஏற்பட்டிராதே! - நிம்மதியாக - கெம்பீரமாக - திருச்சி தேவர் மண்டபத்தில் கூடிக் கலைந்துவிட்டிருக்கலாம். இப்போது தமிழகமே அல்லவா தம்பி, மாநாட்டு வேலையில் ஈடுபட்டிருக்கிறது. துண்டு வெளியீடுகளை ஊரூருக்கும் தருகிற தொண்டிலும், அங்காடிகளிலும் சதுக்கங்களிலும் அழகான விளம்பரத் தட்டிகள் அமைத்திடும் காரியத்திலும், அலுவலகத்திலே என்னென்ன காரணம் காட்டி விடுமுறை பெறுவது என்ற வித்தையிலும், இந்தச் செலவைக் குறைப்போமா, அந்தச் செலவை நீக்குவோமா, என்ன செய்தால் இருபதோ முப்பதோ மாநாட்டுச் செலவுக்காகக் கிடைக்கும் என்று சிக்கனம் பயில்வதிலும் ஈடுபட்டுள்ளவர்களின் தொகை கொஞ்சமா! இவர்கள் அனைவரும் யார்? தூற்றுவோரின் அகராதிப்படி

துரோகிகள்
மாபாவிகள்
அப்பாவிகள்

தூற்றல் நம்மைத் துளைத்துவிட்டது என்றா பொருள்? நாம் காணும் இந்த எழுச்சியுடன் மகிழ்ச்சியும், தூற்றுவோர் குறித்துக் கவலை கொள்ளற்க, நாங்கள் அந்தத் தூற்றலை ஏற்றோமில்லை, பொருட்படுத்தினோமில்லை, அணிவகுத்து நிற்கிறோம், அறப்போரில் ஈடுபடத் தயாராக இருக்கிறோம், அழைப்பை ஏற்றுக்கொண்டு களம்புகத் தயாராகிவிட்டோம், திட்டம் தயாராகட்டும், தியாகத்துக்குப் பஞ்சமில்லை, தீரருக்குக் குறைவில்லை, திருவிடம் தலைநிமிர்ந்து நிற்கிறது - என்று நாடு, நம்மை நோக்கிக்

கூறுகிறது என்றல்லவா பொருள்?

நடந்தே வரப்போகிறோம்.
சைக்கிள் படை கிளம்புகிறது.
மாட்டு வண்டிகளில் வருகிறோம்
தனி இரயிலுக்கு ஏற்பாடு செய்துகொண்டு வருகிறோம்.

என் அருமைத் தம்பி! தூற்றல் நமது வளர்ச்சியைக் கெடுத்துவிடுமோ, குலைத்துவிடுமோ என்பதல்ல-நமக்குக் கிடைத்துள்ள இந்த வளர்ச்சியின் வேகத்தையும், அளவையும், தாங்கிக்கொண்டு, அதற்கு நம்மைத் தகுதியாக்கிக் கொண்டு, அதை நல்லமுறையில் பயன்படுத்தி குறிக்கோள், வெற்றிபெறச் செய்ய வேண்டுமே அதற்கான அறிவுடைமை நமக்கு ஏற்பட வேண்டுமே, அதற்குத் தகுந்த கூட்டு எண்ணம், கூட்டு முயற்சி, நம்மிடம் குன்றாமல் குறையாமல் நின்று நிலவ வேண்டுமே என்பதுதான்.

ஐந்து ஆறாயிரம் தோழர்கள் நம்மில் சிறை சென்றிருக்கிறோம்.

144 தடைகளைத் தூளாக்கி இருக்கிறோம் - போலீஸ் தடியடி நம்மில் நூற்றுக்கணக்கானவர்களைப் பதம் பார்த்து விட்டது!

துப்பாக்கியும் துளைத்துவிட்டிருக்கிறது.

இவைகளைத் தாங்கிக்கொள்ளும் "சக்தி' நமக்குக் கிடைத்திருப்பது மட்டுமல்ல நாம் கவனிக்க வேண்டியது, இப்படிப்பட்ட"அடக்குமுறை' மூலம் நம்மை அடக்கித் தீரவேண்டும் என்ற நிலைக்கு ஆட்சியாளர் வந்து தீரவேண்டி இருக்கிறதே. அதுதான் மிக முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது.

பதவிப் பிரியர்கள் பல்லிளித்துக் கிடக்க, பணக்காரக் கூட்டம் பாதசேவை செய்ய, பத்திரிகை முதலாளிகள் பராக்குப் பாட பவனி வருகிறது, பாரத மாதாவின் ஆசி பெற்ற ஒரு கூட்டம். இதனை, பஞ்சையும் பராரியும் பகல் பட்டினியும் பக்கிரியும் எதிர்க்கிறது. அதிகார வெறியரால் அலட்சியப்படுத்த முடியவில்லை, அடக்குமுறை வீசித்தான் இந்த எதிர்ப்பை ஒழிக்க முடியும் என்ற எண்ணம் பிறக்கிறது.

தோள் வலியும் வாள் வலியும் கொண்ட அரசுகளே, புரட்சிப் புயலில்

சிக்கியகாலை பொடிப் பொடியான செய்தியைச் சுவைபடக் கூறுகிறது வரலாறு. சூதுச் சூலில் தோன்றி வஞ்சனைத் தொட்டிலில் ஆடி, சூழ்ச்சிப் பள்ளி பயின்று, கெடுமதியைத் தோழனாகக்கொண்டு, கொடுங்கோலைக் குருவாக்கிக்கொண்ட ஒரு கொற்றவன், சீறி எழும் மக்களின் அறப்போரை எதிர்த்து நிற்கவா முடியும்! அங்ஙனம் எண்ணுவது பேதமை! ஆயினென்! பெரும்பாலும் கொடுங்கோலர், பேதமையைத்தான் பெருந்துணையாகக் கொள்கின்றனர். எனவேதான் வீழ்ந்துபடுகின்றனர். எனினும் வரலாறு அறியா மக்கள் இங்கு ஏராளம் என்ற எண்ணத்தால் ஓர் அசட்டுத்தனமான துணிவு பெற்று, இன எழுச்சியை, விடுதலைக் கிளர்ச்சியை எதிர்த்தொழித்திடக் கிளம்புகின்றனர், சொந்த நாட்டைக் காட்டிக் கொடுக்கும் சுகபோகிகள்.

திருச்சி மாநில மாநாடு - அரிமா நோக்கு - என்றார் நம் நாவலர்.

காட்டரசனாம் சிங்கம் நடந்து செல்வதிலே காணப்படும் கெம்பீரத்தை மட்டுமல்ல, அதன் பார்வையிலே காணக்கிடக்கும் வீரம் மட்டுமல்ல, அவர் குறிப்பிடுவது, சென்று கொண்டிருக்கும் காட்டரசன் ஓரிடத்திலே நின்று, தான் நடந்துவந்த வழியினை ஒரு முறை பார்த்துவிட்டு, மேலால் நடக்குமாம். அதபோலத் தம்பி, நாம் மாநில மாநாட்டிலே கூடி, இதுவரை நாமாற்றியுள்ள பணியினைப்பற்றி எண்ணிப் பார்த்து, எழுச்சிபெற்று, மேற்கொண்டு நமது பணியினைத் தொடங்கப்போகிறோம். நாம் கடந்து வந்த இடம், சாதாரணமானதல்ல. இன்னல்கள் பலவற்றினைச் சந்தித்து வெற்றி கண்டிருக்கிறோம். இதயம் எதையும் தாங்கும் வலிவு பெற்றுவிட்டது.

அல்ஜீரியா, தூனீசியா, மொராக்கோ, சைப்ரஸ் - எங்கும் விடுதலைக் கிளர்ச்சி முழக்கம் கேட்கிறது.

அங்கெல்லாம், இரத்த வெள்ளத்திலே நீந்துகின்றனர் விடுதலை வீரர்கள்.

தாயகத்தை மீட்பேன்! - என்று சூளுரைத்திடும் வாலிபன் சுட்டுத் தள்ளப்படுகிறான். குண்டுமாரி பொழிந்து, கொடியோர் விடுதலைக் கிளர்ச்சிகளை ஒடுக்கிடத் துணிகின்றனர்! கொடுமைதான் - எனினும் மாற்றான் முன் மண்டியிடுவதைக் காட்டிலும், அவன் வீசும் குண்டுக்குப்

பலியாகி வீழ்வதே மேல் என்று வீரர்களால் துணிவுபெற முடிகிறது. இங்கு நடைபெறுவதோ, அத்தகைய கொடுமை அல்ல; கேவல மானதோர் போக்கினை, மாற்றார் அல்ல, உற்றார், உடன்பிறந்தோர் கொண்டு, விடுதலைக் கிளர்ச்சியை இழித்துரைத்திடவும், மாற்றானுடன் கூடிக்கொண்டு சொந்த நாட்டவனைக் காட்டிக் கொடுக்கவும் முன் வந்துள்ளனர்.

வடநாட்டு ஆட்சியிலிருந்து விடுபட வேண்டும், திராவிடம் தனி அரசாகவேண்டும் என்று நாம் பரணி பாடும்போது, வடநாட்டார் வரிந்து கட்டிக்கொண்டு நம்மை எதிர்த்திடக் கிளம்பினால், நாம் திகைத்திடமாட்டோம்-திராவிடர்களிலேயே சிலர்-தம்மைத் திராவிடர் என்று கூறிக்கொள்ள மறுக்கும் சிலரன்றோ, சீறி எழுகின்றனர், சதிபுரிகின்றனர், விடுதலைக் கிளர்ச்சியை ஒழித்திடத் துடிக்கின்றனர். இந்த வேதனை தரும் கொடுமை, வேறு எங்கும் இல்லை! அல்ஜீரியாவுக்கு இப்போது ஏன் விடுதலை? பிரான்சு ஆட்சியிலேயே இருக்கட்டும் என்று பேசிட அந்நாட்டிலே பக்தவத்சலங்கள் இல்லை!! இங்கு அத்தகையோர் ஆளவந்தார்களாகி உள்ளனர்.

ஐஸ்லந்து<br>
காஸ்ட்டா ரிகா<br>
ஜோர்தான்<br>
லக்சம்பர்க்<br>
லிபியா<br>
நைகார்குவா<br>
பனாமா

இவைகள் யாவும் ஐக்கிய நாடுகள் சபையிலே உறுப்பினர்களாகி உயர்வு பெற்றுள்ளன. எமது சிங்கப்பூர் இந்த நாடுகளை விட அளவிலே பெரிது.

நியூஜிலாந்து, ஐக்கிய நாடுகள் சபையிலே உறுப்பினரான போது, அந்த நாட்டிலே இருந்ததைக் காட்டிலும் அதிகமான குடிவளம் சிங்கப்பூரில் இருக்கிறது.

ஐக்கிய நாடுகள் சபையிலே உறுப்பினராக உள்ள சுதந்திர நாடுகள் 16

சிங்கப்பூரின் வருவாயைவிட குறைந்த அளவு வருவாய் கொண்டன.

எனவே, சிங்கப்பூர் தனி அரசு நடாத்த சகல உரிமையும் வசதியும் கொண்டதேயாகும்.

எனவே, சிங்கப்பூர் இனியும் பிரிட்டிஷ் காலனியாக இருக்கும் இழிநிலை இருத்தல் கூடாது - சுதந்திர நாடாக வேண்டும்.

சிங்கப்பூர், மலேயா போன்றே, பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் இடம் பெற்று வாழ விரும்புகிறது - ஆனால் சுதந்திர நாடாகவேண்டும்.

டேவிட் மார்ஷல் இதுபோல, சிங்கப்பூர் சுதந்திர நாடாக வேண்டும் என்று இப்போது இலண்டனில் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

சிங்கப்பூரின் சுதந்திரத்தைப் பெறுவதற்காக, பிரிட்டனுடன் பேசி முடிவு காண்பதற்காக, 13 உறுப்பினர்கள் கொண்ட ஒரு தூதுக்குழு சென்றிருக்கிறது, டேவிட் மார்ஷல் தலைமையில்.

இந்தத் தூதுக் குழுவில் எல்லா அரசியல் கட்சிகளும் இடம்பெற்றுள்ளன - சிங்கப்பூர் முதலமைச்சராக உள்ள டேவிட் மார்ஷல் தலைமை வகிக்கிறார்.

பேச்சு வெற்றி அளிக்கும் என்று நம்பப்படுகிறது. மலேயாவின் சுதந்திரத்துக்காக, இதுபோல, பிரிட்டனில் உள்ள ஆட்சியாளர்களிடம் பேசி வெற்றி கண்டார் துங்குரகிமான். அதுபோன்றே டேவிட் மார்ஷலின் முயற்சியும் வெற்றி பெறும் என்று நம்பப்படுகிறது.

சுதந்திரம் கேட்கிறது சிங்கப்பூர்!

தன்னைவிட அளவிலே - எந்தெந்த நாடுகள் சிறியவை - அவைகளெல்லாம் சுதந்திர நாடுகளாகத் திகழ்ந்து, ஐக்கிய நாடுகள் சபையிலேயும் இடம்பெற்று, ஏற்றம்பெற்று வாழ்வதை ஆதாரமாகக் காட்டி சுதந்திரம் கேட்கிறது.

துணிவுடனும் உரிமையுடனும், கட்சிப் பாகுபாடுகளை மறந்தும், நாட்டுப் பற்றுகொண்டு, விடுதலை உணர்ச்சி கொண்டு, சுதந்திரத்துக்காக முழக்கமிடும் சிங்கப்பூரின் ஜனத்தொகை 12,00,000!

"திராவிட நாடு என்ற நமது இலட்சிய நாட்டிலே, தமிழர்கள் மட்டும் இரண்டு

கோடி!!

பன்னிரண்டு இலட்சம் மக்கள் கொண்ட சிங்கப்பூர் சுதந்திர நாடாக வேண்டுமென்று கேட்கிறது, - திராவிட நாடு என்பது, துண்டு போடும் திட்டம் - சிறு நாடாக்கிச் சீரழியும் திட்டம் என்று இங்கு பேசுவதற்குக் கட்சிகள் உள்ளன!

பன்னிரண்டு இலட்சம் மக்களே கொண்ட நாடாயிற்றே, இதற்கோ சுதந்திரம் என்று ஐயம்கொள்ள வேண்டாம். இதனினும் குறைந்த ஜனத்தொகைகொண்ட ஜோர்தானும், லிபியாவும், லக்சம்பர்க்கும் பிறவும் சுதந்திர நாடுகளாக உள்ளன அறிந்துகொள்மின் என்று டேவிட் மார்ஷல் எடுத்துரைக்கிறார், மாற்றுக் கட்சிகள் எல்லாமும் ”மற்றப் பிரச்சினைகளிலேதான் மாறுபாடான கொள்கை எமக்கு உண்டு, நாடு சுதந்திரம் பெறும் பிரச்சினையில், எமக்குள் கருத்து வேற்றுமையே கிடையாது. சிங்கப்பூர் சுதந்திர நாடாக வேண்டும் என்பதிலே எல்லா அரசியல் கட்சிகளும் ஒருமனப்பட்டு உள்ளன’ என்று கூறுகின்றன. இங்கு திராவிடநாடு திராவிடருக்கு என்றால், திராவிட நாடாவது சுடுகாடாவது என்று பேச கட்சிகள் உள்ளன.

சிங்கப்பூருக்கென்று ஒரு வரலாறு -பண்பாடு - மொழி - மார்க்கம் - ஏதேனும் தனியான சிறப்பு அளிப்பதாக இருக்கிறதா என்றால் - இல்லை.

திராவிடமோ, பிற பல நாடுகள் வடிவமும் வண்ணமும் வாழ்வும் வளமும் பெறாத நாட்களிலேயே, தனிச்சிறப்புடன் திகழ்ந்ததற்கு வரலாறு காணக்கிடக்கிறது. எனினும், இங்கு, ”தமிழ்நாடு என்ற பெயர் எப்போது இருந்தது’ என்று தமிழில் கேட்டிட ஓர் தமிழர் இருக்கிறார்!!

தொல்காப்பியம், அகம், புறம், சிலம்பு, மணி-எவையும் சிங்கப்பூருக்குக் கிடையாது. அங்கு இளங்கோவோ, காக்கைப் பாடினியாரோ, கபிலரோ, வள்ளுவரோ, கம்பரோ காளமேகமோ இருந்ததில்லை - எனினும் அந்தச் சிங்கப்பூர் சுதந்திர நாடாக விரும்புகிறது, இங்கோ வடவருக்கு அடிபணிந்து, நமது நாவலர் அடிக்கடி எடுத்துக்கூறுவது போல, “சோற்றா லடித்த பிண்டங்களாக’’ இருந்திடச் சம்மதம் அளித்து, அதையே”தேசியம் என்று தெகிடுதத்தம் பேசிட ஓர் கூட்டம் இருக்கிறது-அக்கூட்டம் கோலோச்சும்

நிலையையும் கைப்பற்றிவிட்டிருக்கிறது.

தம்பி! இந்தக் கூட்டத்தின் கொட்டத்தை அடக்கித் தீர வேண்டும். கோலோச்சும் நிலையினின்றும் இக்கெடுமதி யாளர்கள் விரட்டப்பட்டாக வேண்டும். விடுதலைக் கிளர்ச்சி வெற்றிபெற வேண்டும். அதற்காக இந்தக் காட்டிக் கொடுக்கும் கயவர் கூட்டத்தினைக் கருவறுத்திட வேண்டும். அதற்கான திட்டமெல்லாம் தீட்டி, தம்பி! நண்பர் குழாத்துடன், திருச்சி வந்து திரு இடத்து மணிவிளக்கென ஒளி தந்து, மாநாட்டினை மகத்தான வெற்றிகரமாக்கு.

மாநாடாமே... இதுகளுக்கு?... என்று இன்றும் ஏளனம் பேசுவோர் உளர்! அவர்கள், கண்டு திகைத்திடத்தக்கதோர் பிரம்மாண்டமானதோர் அணிவகுப்பு கூடியாக வேண்டும் திருச்சியில்.

அன்பன்,

அண்ணாதுரை

29-4-56

# 50. திருமணம்

சைப்ரஸ் விடுதலைக் கிளர்ச்சியும் திருமண விழாவும்.

தம்பி,

ஒரு திருமணம், காண்போம் வருகிறாயா? தடையா கூறப்போகிறாய்? ஆரியத்துக்கு அடிமைப்பட்டுவிட்டதால் பண்பு கெட்டுப்போன திராவிடச் சமுதாயத்தில், புத்தறிவு புகட்டும் புதுமுறை முயற்சியல்லவா, நமது சீர்திருத்தத் திருமண முறை! அதைக் காண்பதிலேயே ஓர் களிப்பு, அதில் கலந்து கொள்வதிலே ஓர் பெருமை, அதனால் ஓர் இனிமை ஏற்படுமே! நானா, திருமணம் காணத் தடை சொல்லப் போகிறேன். வா, அண்ணா! போகலாம் என்றுதான் கூறப் போகிறாய் தெரியும். அங்கு சென்றால், பண்டைத் தமிழகத்தின் பாங்கும், பகைவரின் பாதம் பற்றுவோராக நம் இனத்தவர் கீழ்நிலை சொல்லுமுன் திருஇடத்தில் இருந்து வந்த சீரும் சிறப்பும், தலைவன் தலைவி என்ற தொடர்பிலே இருந்த தூய்மையும் தோழமையும், சத்தற்ற சடங்குகட்கும் பொருளற்ற மந்திரங்கட்கும், புரோகிதப் பித்தலாட்டத்துக்கும் ஆட்படாமல், காதலிருவர் கருத்து ஒருமித்து ஆதரவுபட்டதே இன்பம் என்ற கொள்கையும், கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள் என்ன பயனுமில என்ற மறைமணி ஒளியும், திருமணம் என்பது வாழ்க்கைத் துணை ஒப்பந்தம் எனும் பேருண்மையும், கேட்போர் ஏற்கும் வண்ணம் எடுத்தியம்பிட நமது தோழர்கள் வருவார்கள், கேட்டு இன்புற, பழைமை விரும்பிகள் கூடப் பேராவல் காட்டுவர். மணமாலை அணிந்து முகத்தை மலராக்கிய நிலையில் மணமக்கள் அமர்ந்திருப்பர், அங்கு புகையும் நெடியும், குமுறலும் குளறலும், வாதமும் பேதமும், வம்பும், வல்லடியும் இரா. எவரிடமும் இன்முகமும் இன் மொழியுமே காணப்படும், அப்படிப்பட்ட அழகிடம் வருவதற்கு யாருக்குத்தான் விருப்பம் எழாது, இதோ வருகிறேன், அண்ணா! எங்கே அந்தத் திருமணம்? தலைமை தாங்குபவர் யார்? எவரெவர் பேசுவர் என்றெல்லாம்தான் கேட்டிடத் துடிக்கிறாய். ஆனால் தம்பி, நான் உன்னை அழைப்பது, சீர்திருத்தத் திருமணத்துக்கு அல்ல! இது வேறோர்

வகையான - முற்றிலும் வேறான - திருமணம். எனினும், கண்டால், உள்ளத்திலே ஓர் எழுச்சி பொங்கும், உரையிலே ஓர் புது உறுதி ஒலிக்கும், கண்களிலே ஓர் புத்தொளி எழும். இத்தகைய திருமணம், அடிக்கடி காணக் கூடியதுமல்ல, கண்டால் எளிதிலே மறந்துவிடக்கூடியதுமல்ல என்பதனை நீயே ஒப்புக்கொள்வாய்.

நெடுந்தொலைவிலே நடைபெறும் திருமணம் - தம்பி - சிந்தனைச் சிறகடித்துக்கொண்டு கிளம்புகிறோம். எளிதாகச் சென்றுவிடலாம், கடலும் மலையும் குறுக்கிட்டு நம்மைத் தடுத்திட முடியாது - பல்வேறு நாட்டுக்கட்டு திட்டம், சட்டம் எதுவும் நம்மைத் தொட்டிழுத்திடாது அல்லவா!

மணமக்கள், தம்பி, ஆமாம்! முகத்திலே இனிமையுடன் ஓர் கெம்பீரம் தெரிகிறதல்லவா!! மணவிழாவில் கலந்து கொள்வதிலே மட்டற்ற மகிழ்ச்சியும் பெருமையும் கொண்டோராகக் கூடி இருப்போர், ஏன், மணமக்களை அப்படிப் பாசத்தோடு பார்க்கின்றனர் என்று புரியவில்லை அல்லவா? இதைக் கேள் தம்பி, புரியும்.

மணமகன் - ஓர் கைதி! ஆமாம், தம்பி, சிறையினின்றும் விடுதலை பெற்று, உடனே, முன்பே ஏற்பாடாகி இருந்த திருமணத்தை முடித்துக் கொள்கிறான் போலும் என்று எண்ணிக்கொள்வாய். அது போன்ற நிகழ்ச்சியேகூட உள்ளத்திலோர் நெகிழ்ச்சி தரவல்லதுதான். இஃது, அதனினும் அரியதோர் நிகழ்ச்சி.

மணமகன், கைதி! திருமணம் செய்துகொள்வதற்காக மட்டுமே, "விடுதலை' இவ்வீரனுக்குத் தரப்பட்டிருக்கிறது; திருமணமானதும் மீண்டும் சிறை செல்ல இருக்கிறான்.

கைதிக்குக் கடிமணம்; அதைக் காண ஓர் கூட்டம்; காண்பதிலே ஓர் பெருமை! வேடிக்கையாக அல்லவா இருக்கிறது.

இந்தக் கைதி, ஒரு நாட்டு மக்களின் உள்ளத்தைத் தன் தொண்டினால் தொட்டுவிட்டவன்; எனவேதான் அவன் திருமணம் காணத் திரண்டுள்ளனர்.

இடம், சைப்ரஸ்! தீவு!! இந்தத் தீவு இன்று பிரிட்டிஷ் ஆதிக்கத்தின்கீழ் இருக்கிறது. தாயகமான கிரீஸ், இந்தத் தீவு, அன்னியர் பிடியில்

இருப்பதை எங்ஙனம் ஏற்றுக் கொள்ளும்? சைப்ரஸ் தீவும் எப்படி, தாயகத்திலிருந்து வேறாக்கப்பட்டு, பிரிட்டனுக்கு வெள்ளாட்டி வேலை செய்து பிழைக்கும் தாழ்நிலையை ஒப்பும்? எனவே, அங்கு விடுதலைக் கிளர்ச்சி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் வெறியைத் தாங்கிக்கொண்டு, வீர இளைஞர்கள் விடுதலைப் போர் நடத்துகிறார்கள். மனுப் போடுவதும் மாநாடு நடத்துவதும் பலன் தரவில்லை! நாடெங்கும் கிளர்ச்சிகள் நடத்தினர், மதிக்கவில்லை. கல்லூரிகளில் விடுதலை முழக்கம் கேட்டது - கவலை கொள்ளவில்லை. மாதா கோயில்களிலே "விடுதலை மான்மியம்' உபதேசிக்கப்பட்டது-சட்டை செய்யவில்லை. கர்த்தரின் ஊழியர்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டனர்-அதனையும் மதிக்க மறுத்தது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம். பிறகு கைக்குண்டு வீசியும் காடுகளில் பாசறை அமைத்துப் போராடியும், பிரிட்டிஷ் தளங்களைத் தாக்கியும் போரிடலாயினர். சைப்ரசில், பிரிட்டிஷ் படைகள் குவிக்கப்பட்டுள்ளன. பாதிரியானாலும் பல்கலைக் கழக மாணவனானாலும், அடுக்களை அணங்காயினும், அலுவலகத் தானாயினும், சைப்ரஸ் விடுதலை பெறவேண்டும் என்ற நோக்கம் காட்டினால், பிரிட்டிஷ் எதேச்சாதிகாரிகளால், சிறைச் சாலைக்கு இழுத்துச் செல்லப்படுகிறார்கள்!

இந்த மணமகன், அதைப்போலச் சிறைப்பட்டவன்!

தாயக விடுதலைக்காகப் பாடுபட்டான்; எதேச்சாதிகாரி களிடம் பிடிபட்டான்; சிறை சென்றான்!!

அவன் காதலைப் பெற்றவள் கண் கலங்கி நின்றாள்.

பேயரிடம் பிடிபட்டவன், என்ன முடிவு எய்துவானோ? வீர சுதந்திரம் வேண்டுபவரை, வெறியர், எதுதான் செய்யா திருப்பர். மகாரியாஸ் பாதிரியாரை, அவர் ஜெபதப மூலம் கர்த்தரின் அருளைப்பெற்று அனைவருக்கும் வழங்கிடும் பூஜிதர் என்பது பற்றியும் கவலையற்று, அவர் காட்டிய நாட்டுப் பற்றினையும் விடுதலை வேட்கையினையும், மன்னிக்க முடியாத குற்றமெனக் கொண்டு, கண்காணா இடம் இழுத்துச் சென்றல்லவா, சிறைப்படுத்தி விட்டனர்! இவனோ காளை! இவனை பிரிட்டிஷ் ஆட்சியாளர் என்னென்ன கொடுமை களுக்கு ஆளாக்குவரோ - சிரச்சேதமோ சித்திரவதையோ - என்ன நேரிடுமோ... என்றெல்லாம்

எண்ணி எண்ணி, அவனைக் காதலனாகப் பெற்ற காரிகை கண்ணீர் உகுத்திடாதிருந்திருக்க முடியுமா?

கண்டனர் - காதல் கொண்டனர் - கடிமணம் அவர்கட்கு இன்ப வாழ்வளிக்கும் - என்று உற்றார் உறவினர் எண்ணி யிருப்பர்; ஊரார் பொருத்தமானதோர் காதல் ஜோடி இது என்று கூறி வேடிக்கை பேசியிருப்பர்.

எல்லாம் கனவு! எல்லாம் கனவு! என்று - கூறுவது போல, இளைஞன், சிறைக்குள் தள்ளப்பட்டு விட்டான்.

அவள் கன்னத்தைக் கிள்ளிய போதும், கூந்தலைக் கோதியபோதும், அதரம் அதரத்துடன் உறவாடிய வேளையிலும், ஆரத்தழுவிய போதும், அன்பே! ஆருயிரே! என்று கொஞ்சியபோதும், இருவரும் இன்பலோகம் சென்றிருப்பர்.

ஆனால் காதலியைப் பெற்றதால், அவன் அடைந்த களிப்பு-அவன் கண்களை மறைத்துவிடவில்லை-அதேபோது அவனுக்குத் தன் தாயகம் தளையுண்டு, தருக்கர் ஆட்சியில் சிக்குண்டு, மதிப்பிழந்து கிடந்திடும் கீழ்நிலையும் தெரிந்தது - தெரிந்ததும் நெஞ்சிலோர் தணல் நுழைந்தது.

பக்கத்திலே ஓர் பாவை, காதற் கனிரசம் ஊட்ட! பருவமோ காதற் பாங்கினை அனுபவித்திடுவதற்கு ஏற்றது! எனினும், உலவும் மண், உள்ளே புகும் காற்று-அடிமை முடைநாற்றம் வீசுவதாக இருக்கிறது! நாடு அடிமைக் காடாகிக் கிடக்கிறது - காதல் வாழ்விலே நாம் இன்பம் தேடிக்கொள்கிறோம் - நாடோ அன்னியன் பிடியில் சிக்கி நாற்றமடித்துக் கிடக்கிறது இந்நிலையில் நாட்டை மறந்து, நாம் காதற் தோட்டத்திலே உலவிக் களிப்படைவது இயலுமா, முறைதானாகுமா? என்று அந்த இளைஞனால் எண்ண முடிந்தது. தம்பி! காதலியின் கடைப்பார்வை கண்டு விட்டால், எதனையும் மறந்து, எல்லாம் இந்த ஏந்திழையாளின் முகத்தில் கண்டிடலாம் என்றிருப்பதற்குத் தான், மிகப் பெரும்பாலான இளைஞர்களால் முடியும். முதியவர்களே, தின்றதை மென்று அசைபோடும் முறையில், அப்போது நடந்தவைபற்றி எண்ணி மகிழத் தொடங்கிவிட்டால், மற்றவற்றை மறந்திடும் நிலைபெற்று விடுகிறார்கள் என்றால், இளைஞன் நிலை எங்ஙனம் இருந்திடும். எனினும், காதலின்பத்தில் கட்டுண்டு கிடந்த இக் காளைக்கு, நாட்டு நிலை

பற்றியும் எண்ணிட முடிந்தது - நாட்டு அடிமைத்தளைகளை உடைத்திடும் நற்பணியாற்ற வேண்டும் என்று துணிந்திடவும், செயல்படவும் முடிந்தது! சிறைப்பட்டான்! கண்ணீர் சிந்தியிருப்பாள், அவன் விரும்பிய சிற்றிடையாள் - எனினும் அந்த நிலையிலும், அவள் முகத்திலோர் தனிவகை எழில் பூத்துத்தான் இருக்கும்; என் கண்ணாளன் என் அருகில் இல்லை - என் எதிரில் இல்லை-என்னைத் தொட்டிழுத்து விளையாடவும், கட்டி முத்தம் தந்திடவும் முடியாத நிலையில் பூட்டி வைக்கப்பட்டுத்தான் இருக்கிறான், சிறைக்கொட்டடியில், அவனைக் காணாததால் என் களிப்பு கருகிடத்தான் செய்கிறது! ஆனால், என்னை வென்றோன், நாட்டு விடுதலை வீரன் - அஞ்சாநெஞ்சன் - தன் சுகம், தன் இன்பம் பெரிதல்ல, தாய்நாட்டுக்குத் தொண்டாற்றும் கடமையே பெரிது என்று கொள்கைகொண்ட குணக்குன்று என்று எண்ணும்போது, நெஞ்சிலே சுரக்கும் தேன் ஊற்று கருகிடும் களிப்பை, செழித்திட வைக்கிறது. புதியதோர் பூரிப்பும் பெருமையும் கொள்கிறேன் என்று அந்தப் பூவை எண்ணாமலிருக்க முடியுமா?

அவளும் அவனும், சைப்ரஸ் தீவுக்கு மட்டுமல்ல, விடுதலைக் காவியத்துக்கே ஏற்றவர்களாகி விடுகின்றனர்.

எப்போது திருமணமடி உனக்கு?

அவர் வெளியே வந்ததும்!

இந்த உரையாடலில், பிரிவாற்றாமை தரும் வாட்டத்தை ஓட்டி விடுமளவுக்கு, காதலன் நாட்டுக்கு உழைத்ததால் சிறைப்பட்டிருக்கிறான் என்ற உணர்வு தரும் பெருமையுமல்லவா ஒலிக்கிறது!

அத்தகைய திருமணமடா, தம்பி இது!!

நாட்டைப் பிடித்து ஆட்டிப் படைத்திடும் போக்கினருக்கு, எக்காரணத்தாலோ, நகைச்சுவையும் இருக்கும்போல் தோன்றுகிறது. ஆகவேதான், எந்த வீரனைப் பிடித்து வெஞ்சிறையில் அடைத்தனரோ, அவனை, திருமணம் செய்துகொள்ள அனுமதி அளித்து, அதற்காக வெளியே சென்றுவர ”விடுதலை’யும் தந்தனர்.

கைதியைக் கடிமணம் செய்துகொள்ள, காரிகைக்கு மனம் இடம் தராது

என்றெண்ணினரோ - அன்றி, கைதியாக இருக்கும் நிலையில் கலியாணம் ஒருகேடா, என்று அந்தக் கர்மவீரனே சலித்துக்கொள்ளுவான் என்று எண்ணினரோ - காரணம் எதுவோ தெரியவில்லை. சிறைப்பட்டுக் கிடந்தவனைத் திருமண விழாவுக்காக மட்டும் வெளியே விடுவித்தனர்.

"அவனும் அவளும்' சைப்ரஸ் தீவின் எழுச்சியும் எழிலும் உருவெடுத்ததுபோல, மணவிழா நிகழ்ச்சிக்கு வந்துள்ளனர்; இந்த வீரனுக்கு நடைபெறும் மணவிழாவில் கலந்துகொண்டு விடுதலை வரலாற்றிலே இடம் பெறப்போகிறோம் என்ற பெருமிதத்துடன் உற்றார் உறவினரும் ஊர்ப் பெருமக்களும் கூடி உள்ளனர்.

மணமகன் பெயர் ஆண்டிரியாஸ் ஜோனைட்ஸ்.

ஜோவுலா ஜோனாட்பூர் என்பது மணமகள் பெயர்.

உச்சரிக்கவோ, நினைவிற்கொள்ளவோ, கடினமான பெயர், தம்பி. எனவே நாம் மணமகனை எழுச்சி என்றழைக்கலாம், மணமகளை எழில் என்று அவனை அழைத்திடச் சொல்வோம்.

திருமணம் நடைபெறும் இடத்தின் பெயரும், உச்சரிக்கக் கடினமானது - கோகிநோட்ரிமிதியா - நமக்கேன் தொல்லை - இந்தச் சிற்றூருக்கு நாம் வீரபுரி என்று பெயர் வைத்தழைப்போம்.

மணமகன், கரங்களில் விலங்குடன்தான் அழைத்து வரப்பட்டான்... போலீஸ் அதிகாரிகள் உடன்வந்தனர்.

திருமண மண்டபத்துக்குள் நுழையும்போதுதான், விலங்குகள் அகற்றப்பட்டன.

அவனை மணாளனாகக் கொள்ளும் எழில் இருபதாண்டுப் பாவை!

பாதிரியார், ஆசீர்வதிக்கிறார்-அந்தச் சிற்றூரின் மக்கட் தொகை ஆயிரத்துக்கும் குறைவு - ஆனால் அவ்வளவு மக்களும் அங்கு கூடி இருக்கிறார்கள்; முக மலர்ச்சியும் கண்ணீரும் சேர்ந்து காட்சி தருகிறது.

வாழ்க! வாழ்க! என்று அவர்கள் தழதழத்த குரலில் வாழ்த்துகிறார்கள். தம்பி! மணமக்களை மட்டுமா? வீரத்தை வாழ்த்துகிறார்கள்! பெருமைக்குரிய

அந்த மணப்பெண்ணின் உளத்திண்மையை வாழ்த்துகிறார்கள்! இத்தகைய சம்பவங்கட் கெல்லாம் பிறப்பிடமாகிவிட்ட தமது தாயகத்தை வாழ்த்துகிறார்கள்.

அதோ பார் தம்பி! கிராமத்து மக்களின் கனிவை - பரிசுப் பொருள்களைக் கொண்டுவந்து குவிக்கிறார்கள். கண்ணீரைத் துடைத்தபடி, மணமக்களின் கைகுலுக்கி வாழ்த்துகிறார்கள்!

வெண்ணிற ஆடை அணிந்த மணமகள் - மணமகனைத் தழுவிக்கொள்கிறாள்! இருவரும் ஏதோ பேசுகிறார்கள். என்ன பேசுவார்கள்?

எண்ணம் ஈடேறிவிட்டது, இன்பமே!

கனவு பலித்தது, கண்ணாளா!

வானகம், வையகம் வந்தது என் வண்ணப் புறாவே!

தேனமுதைச் சொல்லாக்கித் தருகிறீரே, என் தேவனே!

மலர் பறிப்போமா, என் மனோஹரி!

மணம் தேடிச் செல்கிறீரோ, என் மணாளரே!

பெரும் பிழை புரிந்துவிட்டேன், பெருமைக்குரியவளே உன் முகமலர் என் கரத்திலிருக்க, நான் வேறு மலர் தேடுவது, மடத்தனம்தான்.

போதும் விளையாட்டு!

புனலாடலாம், பொழுது சாயும்வரை.

பிறகு... அதற்குப் பிறகு....

உன் மடியில் நான்.... என் கரத்தில்....

அந்தி சாய்ந்ததும், ஆரணங்கே....

அந்தி சாய்ந்ததும்...

கன்னங்களைக் கீறிக் கீறி...

கண்ணே...

என்ன, அன்பே! குழந்தைபோல!

நகரத்து நாட்டிய சாலைக்கு உன்னை அழைத்துச் செல்வேன்...

சாயம் பூசிய உதட்டுக்காரிகளின் சல்லாபம் பார்க்கவா...? வேண்டாம்....

படக்காட்சிக்குச் செல்வோமா....?

அங்கு காதல் கிடைக்கப் பெறாததால் கலங்கும் காட்சி காட்டுவர்.. வேண்டாம், அன்பே...

ஓவியக் காட்சி...?

எனக்கென்று உள்ள இந்த உயிரோவியம் போதும் என்று சொன்ன சொல்லை மறந்தீரோ....?

மறப்பேனா, மாதரசி! உன்னை மகிழ்விக்க, நான் என்ன காட்சிக்குத்தான் அழைத்துச் செல்வது...?

என்னை மகிழ்விக்கவா, மன்னா?

ஆமாம், என் இன்பமே!....

என்னை மகிழ்விக்க....

எங்கு அழைத்துப்போக, ஆருயிரே....

என்னை மகிழ்விக்க... என் குணாளா! எங்கும் என்னை அழைத்துச் செல்ல வேண்டாம்... என் அருகில் இருந்தால் போதும்.... என் அருகில் இன்னும்.... இடைவெளி இல்லா நிலையில் இதுதான் கண்ணே என் இன்பம்.... ஆம்! வேறு மகிழ்ச்சி தரும் இடமும் உண்டா என்னைப் பிரியா நிலை வேண்டும்.... என் அருகே... இன்னும் அருகே...

இது போலவும் இதனினும் சுவை கொட்டவும் காதலர்கள் பேசிக்கொள்வர்.... நாடக மேடையிலேனும்!''

தம்பி! கடிமணம் முடிந்தது - இவர்கள் ஏதும் அதிகம் பேச முடியாது.

அதோ வந்துவிட்டார்கள் அதிகாரிகள், அவனை அழைத்துச் செல்ல.

மணமகன், மீண்டும் கைதியாகிறான்!

கரம் பிடித்துக் கண்களில் ஒத்திக் கொண்டாள் - இதோ அந்தக் கரங்களில் மீண்டும் விலங்கு பூட்டுகின்றனர்.

திருமணம் முடிந்தது - அவனுக்கு மணவிழா விருந்து இல்லை; சிறையில் வழக்கமாகத் தரப்படும் ரொட்டியும் தண்ணீரும்தான்!!

மணவிழா முடிந்தது, மணமக்கள் இருவரும் கை கோத்துக் கொண்டு மலர்ச் சோலை செல்லப் போவதில்லை, அதோ மணமகன் போலீஸ் வண்டியில் ஏற்றப்பட்டு விட்டான்!

சென்று வருகிறேன்! - அவன் கை அசைத்துக் கூறுகிறான்.

கண்ணாளா! திருமணம் முடிந்ததும், பிரிவுதானா...? தையல் தேம்புகிறாள்!

தாயகமே! சைப்ரசே! இங்கு இளம் தம்பதிகள், பிரித்து விடப்படும் கொடுமையைப் பார்! பார்! அம்மா, உன் மக்களுக்கு வந்துற்ற அவதியைப் பார்! - ஊர் மக்கள் புலம்புகிறார்கள்.

நீ, ஏனடா, தம்பி, அழுகிறாய்? என் கண்களிலே ஏன் நீர் துளிர்க்கிறது? என்றா கேட்கிறாய். என்ன செய்வது? கண்ணீர், அவர்கட்கு நாம் அளிக்கும் காணிக்கை!

சைப்ரஸ் தீவிலே இதைக் கண்டோம்! தம்பி! நாட்டுப் பற்று மக்களை எத்தகைய வீறுகொள்ளச் செய்கிறது என்பது கண்டோம். எழுச்சி தரும் நிகழ்ச்சியாக அமைந்த திருமணத்தைக் கண்டோம்.

காதற் கணவனை எண்ணிக் கண்ணீர் உகுத்திட, அப்பெண்மணி சென்றுவிட்டாள்.

என் வாழ்வுக்குத் திருவும் மணமும் தேடிக்கொண்டேன். என் தாய்நாட்டுக்கு விடுதலையும் வாழ்வும் பெற்றளிக்க, இனி நான் செய்ய வேண்டியது என்ன என்ன என்று எண்ணித் திட்டமிட்டபடி மணாளன் சிறை சென்றுவிட்டான்.

கடிமணம் புரிந்துகொண்டான். கடுஞ்சிறையில் கொண்டு சேர்த்தனர்- இத்தகைய காதகர் ஆட்சியை வீழ்த்துவது எங்ஙனம் என்று எண்ணிக் குமுறியபடி வீரபுரி மக்கள் தத்தம் வீடுகளுக்கும் வயல்களுக்கும் சென்றுவிட்டனர்.

தம்பி! வா! இனியும் நமக்கு இங்கு என்ன வேலை? நமது தாயகமாம் திராவிடத்தின் விடுதலைக்காக, நாம் செய்ய வேண்டிய பணியினைத் திறம்படிச் செய்தற்கான, உள்ள உரம் தரும் மாநில மாநாடு காணச் செல்வோம்!!

கரம் பிடித்த காதலியைக் கண்ணீர் பொழியும் நிலையில் விட்டு விட்டு, சிறைக் கோட்டம் சென்றுள்ள எழுச்சியை நினைவிலே வைத்துக்கொண்டு, திருச்சி மாநில மாநாட்டுக்குப் போய்ச் சேருவோம். தத்தமது நாடுகளை விடுவிக்க அரும்பாடு பட்டவர்கள், ஆற்றல்மிக்க வீரர்கள், தியாகிகள், அனைவரையும் மனதிலே கொண்டு பிறந்த நாட்டுக்கு வந்துற்ற இழிவும் இன்னலும் நீங்கிடப் பெருங்கிளர்ச்சியில் ஈடுபட, நம்மை நாம் பக்குவப்படுத்திக் கொள்வதற்கான பாசறையாக அமைந்துள்ள மாநில மாநாட்டுக்குச் செல்வோம்.

எல்லோரும் என் காலில் சிக்குண்டு போயினர் - இதுகள் ஏனோ தாவிக் குதிக்கின்றன!

இதுகள் நடத்தும் கட்சி ஒரு அரசியல் கட்சியா? இது குழப்பக் கட்சி!

தேர்தலுக்கு நிற்பார்களாமே - நிற்கட்டும் - நிற்கட்டும் - தீர்த்துக் கட்டிவிடுகிறேன்!

பெயர் மாற்ற ஒரு போராட்டமாம் - பூ! பூ!-இது ஒரு கட்சியா...?

தம்பி! பச்சைத் தமிழர் காமராஜர் இதுபோலக் கேவலமாகப் பேசுகிறார், நமது கழகம் பற்றி!

உன் நோக்கத்தைக் கேவலம் என்கிறார்; உன் அறிவாற்றலை அபத்தம் என்கிறார்; உன் வீரத்தைக் கேலி செய்கிறார்; தியாகத்தைத் தூசு என்கிறார்; நாட்டையே கூட அல்லவா, தமிழ்நாடு என்று அழைக்க மறுத்துக் கேவலப்படுத்துகிறார்.

இதற்கு-இவர்தம் ஆணவப் பேச்சுக்கு - அலட்சியப் போக்குக்கு - என்ன பதில் அளிப்பது - எவ்வகையில் பதில் அளிப்பது?

திருச்சி மாநில மாநாடு, வீரர் கோட்டம் என்பது விளக்கப்பட்டால்,

பட்டிதொட்டிகளிலிருந்தெல்லாம் பல்லாயிரவர் கிளம்பி, பல இலட்சமாகப் பெருகி, எழுச்சி வெள்ளமாகக் காட்சி அளித்தது மாநில மாநாடு என்றால்,

அங்கு எழுச்சிமிக்க சொற்பொழிவுகள், இனிமை பயக்கும் கலை விருந்து இவற்றோடு அமைந்துவிடாமல் திறம்படப் பேசி, செயல்படத் துணிவுகொண்டு, தீவிரமான திட்டம் தீட்டினர் என்றால்,

திருச்சி மாநில மாநாடு அரசியல் வட்டாரத்துத் திருவிழா அல்ல, விடுதலை வரலாற்றிலே ஓர் கட்டம் என்பது விளக்கப்பட்டால்,

கேவலமாகப் பேசிவரும் காமராஜர், உண்மையை உணர முடியும்! அவர் உணர்ந்தாலும் உணராவிட்டாலும், உலகு உணரும்.

உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டு என்றார் சான்றோர். உயர்ந்தோர் என்று அந்த உளப் பண்பு உணர்ந்த அறங்கூறும் பெரியோன் குறிப்பிட்டது, ஜாதியை அல்ல-குணத்தை-அறிவை- ஆற்றலை!

உலகம் உணரட்டும் தம்பி, உன்னையும் என்னையும் ஆட்கொண்டிருக்கும், விடுதலைக் கிளர்ச்சி, வீண் வேலை அல்ல என்பதனையும், உயர் இடம் அமர்ந்து கொண்டவர்களின் அலட்சியமும் ஆணவமும், அந்த விடுதலைக் கிளர்ச்சியைக் குலைத்துவிடாது என்பதனையும்.

தம்பி! சைப்ரஸ் தீவுத் திருமணத்திலே நாம் கண்ட எழுச்சி- எழில்-நினைவிலே பதிந்து நிற்கிறதல்லவா!

வாழ்க சைப்ரஸ்!-என்ற வாழ்த்தொலியை மணவிழாவிலும் கேட்டோம்.

வாழ்க திராவிடம்!-என்று முழக்கமிட்டபடி, திருச்சி செல்வோம், வா

அன்பன்,

அண்ணாதுரை

6-5-56

# 51. அறச்சாலை

தி. மு. க. மீது தாக்குதல் -
காட்கில்லின் "மராட்டியர்' உணர்ச்சி-
தேவிகுளமும் பீர்மேடும் காமராஜரும்.

தம்பி,

சிறைச்சாலை காண அழைக்கிறேன், உன்னை!

ஆரம்பமாகிவிட்டதா, அண்ணா, மாநில மாநாடு ஒரு கிழமை இருக்கும்போதே சிறைச்சாலைக்குச் செல்ல அழைப்பா! ஏனண்ணா, நான் என்ன சித்தம் சோர்ந்து விடுவேன் அல்லது ஏதேனும் தத்துவ விவாதம் நடத்தித் தப்பித்துக் கொள்ளுவேன் அல்லது விதிவிலக்கு அளிக்கும்படி கேட்பேன் என்று எண்ணிக்கொண்டனையோ! ஏளனம் பேசுவது அழகா! நான், என்ன, மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை எமை மாட்ட நினைக்கும் சிறைச்சாலை என்ற கவிதையை அறியாதவனா? வேடிக்கை கேள் அண்ணா! நான் இந்தக் கவிதையைச் சுவைத்துப் படித்த இடமே சிறைச்சாலை! எந்தச் சமயத்தில், கழகம் கட்டளையிட்டதும் களம் புகாதிருந்தேன்! தொட்டிற் குழந்தை என்று பிறர் கூறிய நிலையில் நமது கழகம் இருந்த நாட்களிலேயே, வடநாட்டு அமைச்சர்கட்குக் கருப்புக்கொடி காட்டி, திராவிடத்தின் "மனக்கசப்பை' வடவர் அறிந்திடச் செய்ய வேண்டும் என்று திட்டம் தரப்பட்டதே, நானென்ன ஓடி ஒளிந்தேனா, ஒய்யாரம் பேசினேனா. தடியடி தந்தனர் - தழும்பு கிடைத்தது! சிறையில் தள்ளினர்-கஞ்சிக் கலயம் கிடைத்தது! நெஞ்சு சிறைக்கே அஞ்சும் நிலையில் இருக்குமாயின், நாம் பெற்றாக வேண்டிய திராவிடத்தைப் பிடித்து ஆட்டிப் படைத்து வரும் தீயர்கள் சித்திரவதை செய்து நம் சிந்தையைச் சிதைத்திடத் துணிவரே, அப்போது என்ன ஆகும்? அத்தகைய கோழை உள்ளம் படைத்தவனல்ல, உன் தம்பி! திட்டம் தயாராகட்டும், அறப்போர் நடைபெறட்டும், ஆணையை ஏற்றுச் சிறைபுகத் தயாராகத்தான் இருக்கிறேன்; நான் மட்டுமல்ல, எண்ணற்றவர்கள்! எண்ணற்றவர்கள்! சிறை செல்ல அழைப்பு வரும் என்பதை நான் எதிர்பார்த்தபடிதான் இருந்து வந்தேன்.

எனவே திடுக்கிட்டுப் போகவில்லை! மாநில மாநாடு மறவர்தம் படைவீடு! என்பதனை நான் அறிந்தவன். அங்கு நாம் கூடிப் பேசித் தீட்டப்போகும் திட்டம், ஆட்சியாளர்களின் உச்சி மோந்து மகிழ்வதா அல்லது உள்ளங்காலை முத்தமிட்டுக் களிப்படைவதா, எட்ட இருந்து கொண்டே கட்டிக்கரும்பே! என்று அழைப்பதா அல்லது செங்காயே கனியாயோ? செந்தேனாய் மாறாயோ? என்ற கொஞ்சுவதா, என்று வெட்கத்தால் முகம் சிவக்க, ஆவலால் உள்ளம் துடிக்கச் சிலர் தீட்டியது போன்ற”கண் சிமிட்டிக் கை ஜாடை காட்டும்’ திட்டம்போலவா இருந்திடும்! ஆட்சியாளர்கள், நமது நியாயமான கோரிக்கைகளைப் புறக்கணித்துள்ளனர், பொது மக்களின் எழுச்சிக் குரலைத் துச்சமெனக் கருதுகின்றனர், நமது பிறப்புரிமையைப் பறித்துக்கொண்டவர்கள், நாம் பட்டிமாடுகளாகிக் கிடக்க வேண்டும் என்ற கட்டளை யிடுகின்றனர் - இந்தக் கேடு களைந்திட, நம்நாடு நமதாக, நாம் எத்தகைய முறையில் செயலாற்ற வேண்டும், செயலாற்றுங்காலை நாம் எத்தகைய காணிக்கைகளைக் களத்திலே தந்தாக வேண்டும் - என்ற இன்ன பிற பற்றியன்றோ, எண்ணித் துணிந்திடக் கூடுகிறோம் - சிறை தன் அகன்ற வாயைத் திறந்து நம்மை விழுங்கிடத்தானே செய்யும்! இவை அறியாதவனல்ல - அறிந்தே, மாநில மாநாட்டுக்கு வந்திருந்து, என் பங்கினைச் செலுத்திட நான், முன்னேற்பாடுகளைச் செய்து கொண்டு, மற்ற நண்பர்கள் அதுபோன்றே ஆவலுடனும் ஆர்வத்துடனும், கடமை உணர்ச்சியுடனும் அஃதளிக்கும் களிப்புடனும் புறப்பட ஏற்பாடுகள் செய்து கொண்டிருப்பது கண்டு பூரித்து நிற்கிறேன் - என்னை அறிந்திருந்தும், என் பணியின் தன்மை தெரிந்திருந்தும், என் உள்ளத்தில் மூண்டெழுந்துள்ள நாட்டுப்பற்று கொழுந்து விட்டு எரிவது தெரிந்திருந்தும், அண்ணா! ஏளனம் செய்வது போல, சிறைச்சாலை செல்வோம் வா, தம்பி! என்று கூறுகிறாயே, சரியா, முறையா....

தம்பி! மளமளவென்று நீ, இவ்விதமாகத்தான் பேசுவாய் என்பது தெரியும் எனக்கு. சென்ற கிழமை நான் உன்னை ”திருமணம்’ காண அழைத்தேன் - இந்தக் கிழமை சிறை காண அழைக்கிறேன், சிந்தனைச் சிறகடித்துச் செல்வதற்குத்தான். உண்மையாகவே சிறை செல்லும் கட்டம் பிறக்கும்போது, நீண்ட கடிதமா தேவை! கழகத்தின் தீர்மானம் போதாதா! அதை நான்

அறியேனா? சிறையிலே நீ, சித்தம் கலங்காது சிங்கமென உலவியதைக் கண்டு களித்தவனல்லவா உன் அண்ணன். இப்போது உன்னை அழைப்பது, சிறைக் காட்சியைக் காண!

காமராஜர் கடுங்கோபம் கொண்டு கனலே கக்குகிறார், செல்லுமிடமெல்லாம்.

கனல் கக்கவே, பல இடங்கட்குச் செல்லுகிறார்.

காரணம், அவர், தமிழகத்தின் அரசியலில், எப்பக்கம் திரும்பினாலும், வாழ்த்தும் வரவேற்பும், பாராட்டுதலும் உறவாடலும் காண்கிறார் - நமது முகாமில் முழக்கம் கேட்கிறது - எனவே அவருக்கு முகம் கடுகடுப்பாகி விடுகிறது - புருவத்தை நெரிக்கிறார் - கனலைக் கக்குகிறார்!

பாவம், அதையேனும் செய்யட்டும்! வேறு என்ன, பிரமாதமான ”சேவை’ செய்ய முடிகிறது அவரால்!!

அவரிடம் தம்பி, குறிப்பாக என்னைப் பற்றியும், பொதுவாக நமது கழகப் பேச்சாளர் குறித்தும் பலர் பல்வேறு விதமான ”சாடி’ கூறி அவரைச் சல்லடம் கட்டச் சொல்லிச் சிலம்பு போடுகிறார்களாம் - அவரும் ஆவேசம் கொண்டு விட்டார்.

ஒவ்வோர் நாளும், பத்திரிகையிலே, ”பக்கத்துக்குப் பக்கம்‘, முதலமைச்சரின் ”அடாணா’ வாகவே இருக்கிறது!

தி. மு. க. மீது கண்டனம்
தி. மு. க.வுக்கு எச்சரிக்கை
தி. மு. க. ஒரு குழப்பக் கட்சி
தி. மு. க.வை ஒழித்துக்கட்ட வேண்டும்.

என்று தலைப்புகள் கொடுத்துக் கொடுத்து, இதழாசிரியர்களே சற்று அலுத்துவிட்டிருக்கிறார்கள் - காமராஜர், அலுக்காமல் சளைக்காமல், தி. மு. க. மீது ”தாக்குதலை’ நடத்திய வண்ணம் இருக்கிறார்.

போகிற போக்கைப் பார்த்தால், தம்பி, அதிக நாட்களுக்கு, அவர், நம்மை வெளியே விட்டுவைக்க மாட்டார் போலத் தெரிகிறது.

எனவே, சிறைச்சாலைக்குள் எந்த நேரத்திலும் நாம் தள்ளப் படக்கூடும்!

அதிலும் மாநில மாநாடு, நமக்கு நல்லதோர் செயல் திட்டம் தருகிறது என்றால், நாம் மாநில மாநாட்டின் வனப்புப் பற்றியும் சிறப்புக் குறித்தும் பேசி மகிழ வேண்டிய இடமே சிறைச்சாலையாகத்தான் இருக்கும்! சூழ்நிலை, அவ்விதம் உருவாகிக்கொண்டு வருகிறது.

ஆனால், தம்பி, நான் இப்போது உன்னை சிறை காண அழைக்கிறேன்!

அடைந்தே தீருவோம் திராவிட நாட்டை!

அடக்குமுறை ஆட்சி அடியோடு ஒழிக!

என்று முழக்கமிட்டுக்கொண்டு கருப்புக்கொடி காட்டவோ, மறியல் நடத்தவோ, வரி கொடாதீர்கள் என்று மக்களைக் கிளப்பி விடவோ, வடநாட்டுச் சாமான்களைக் கொளுத்துங்கள் என்று இயக்கம் நடத்தவோ புறப்பட்டு விடாதே - என்னோடு புறப்பட்டு வா, ஒரு சிறைக் காட்சியைக் காண்போம்.

அதோ பார், தம்பி, ஓர் மூதாட்டி!

அந்தக் கண்களிலே கவனித்தாயா, ஓர் புத்தொளி பூத்திடுவதை! என்ன ஆவல்! எத்துணை ஆர்வம்!

வழிமேலே விழிவைத்து நிற்கிற நிலையைப் பார்!

பட்டமரம் துளிர்த்திடும் என்கிறார்களல்லவா, பழமொழி! இதோ பார், ”பழுத்த ஓலை’ ஓர் புத்தம் புது இளமை எழில் பெறுகிறது.

எதையோ, மிகமிக ஆவலாக எதிர்பார்க்கிறார் இந்த அம்மை!

குதூகலம் கொந்தளிக்கிறது மனதில் - முகம், அகத்திலே ததும்பும் அந்த ஆனந்தத்தைக் காட்டுகிறது.

சற்றுத் தொலைவிலே ஓர் காலடிச் சத்தம்! இங்கே அந்த அம்மையால் ”இருப்பு’க்கொள்ள முடியவில்லை! நீர் துளிர்க்கிறது கண்களில் - நிழலுருவம் கண்டதும்

மகளே,....

அம்மா,....

வாடி, என் அருமை மகளே!

வந்தேன் அம்மா, இதோ.

புரிகிறதா, தம்பி, இந்தப் புதுமைக் காட்சி.

தாயும் மகளும்!! சிறைச்சாலையில் சந்திக்கிறார்கள். மகளைக் காணப்போகிறோம் என்ற மகிழ்ச்சியால்தான் அந்த "மாதரசி' மலர்ந்த முகமும், நீர் துளிர்க்கும் கண்களும் கொண்ட நிலையில் காட்சி தந்தார்கள்.

மகளைத் தழுவிக்கொண்டு முத்தமிடத் தாய் ஓட, தாயின் தாளைத் தொட்டுக் கும்பிட அந்தத் தையல் ஓடி வர காண்கிறோம் நாம்.

காணக் கிடைக்காத காட்சியடா தம்பி, இது! கண்டோர் என்றென்றும் மறந்திட முடியாது, இந்தக் காட்சியினை.

சிறையிலே சந்திப்பு - தாயும் மகளும்!

ஐயோ! அம்மா! உனக்கு இந்தக் கதி வந்ததே - என்று மகள் கதற, என் விதி! என் வினை! என்ன செய்யலாமடி மகளே! நீ, பெற்றெடுக்கும் செல்வத்தைத் தூக்கி வளர்த்து மகிழ்ந்திடவும் கொடுத்து வைக்காத பாவியானேன் - என்று தாய், தலையி லடித்துக் கொண்டு அழ, சிறைக் காவலாட்கள், சரி! சரி! நேரமாகிவிட்டது! கிளம்பு! கிளம்பு! என்று உத்தரவு பிறப்பிக்க- இத்தகைய காட்சி அல்ல இது.

"அம்மா!'' என்ற தாயின் குரலில் ஓர் மகிழ்ச்சியும் பெருமிதமும் ஒலிக்கிறது.

"மகளே!'' என்ற தாயின் குரலில் பாசமும் வெற்றி இன்பமும் கேட்கிறது.

சிறைப்பட்ட தாயுடன் சேர்ந்து சிறையில் இருக்க வருகிறாள் மகள்!

மகளும் என்னுடன் சிறையில்! - என்று மகிழ்ந்து பேசும் நிலையில், தாய்!

ஒப்பற்றதோர் காட்சியன்றோ இது!

பெற்றேன், என் பெருமையைப் பெரிதாக்கும் பண்புள்ள மகளை - என்று தாய் கூற - என் தாயின் உதிரம் எத்தகையது என்பதை என்னைக் கண்டு உணருமின் என்று மகள் கூற தாயும் மகளும் என்றால் இப்படி அல்லவா இருக்க வேண்டும் என்று பலரும் பாராட்ட, இவரிருவரும் என் மக்கள்! இது போன்ற வீரப்புதல்வியரும் வீரப்புதல்வர்களும் ஏராளம் ஏராளம்! - என்று

மராட்டிய மாதா மகிழ, இதென்ன எழுச்சி! ஈடில்லா எழுச்சியாகவன்றோ இருக்கிறது - என்று எதேச்சாதிகாரி கூட எண்ணித் திகைத்திட - காட்சி ஒன்று காண்கிறோம்.

காட்கில் பெற்றெடுத்த பொற்கொடி, அந்த மங்கை நல்லாள்!

அவரைக் கணவராகக் கொண்டவர், அந்தத் தாய்!

காட்கிலின் துணைவியாரும், மகளும், ஒரு சேரச் சிறையிலே உள்ளனர்!

தாய், முன் நடந்து வழி காட்டுவது போல, முதறிற் சிறைப்பட்டார்கள். என் அன்னையைச் சிறையிலே தள்ளி விட்டால், அறப்போர் பட்டுவிடுமோ, அறிவிலிகாள்! இதோ, மகள் நானிருக்கிறேன், மாதா விட்டுப்போன இடத்திலிருந்து தொடர்ந்து பணியாற்ற என்று கூறுவதுபோல மகளும், சிறைக்கோட்டம் புகுந்தார்.

மராட்டியமே! உன் மண்ணின் வளமே வளம்! மாவீரன் சிவாஜி ஊட்டிச் சென்ற வீரம், இத்தனை தலைமுறைகளுக்குப் பிறகும், எத்துணையோ இன்னல் இடர்ப்பாடு இழிநிலை ஆகிய தாக்குதல்களுக்குப் பிறகும், கருகாமலிருக்கிறது, இக் காட்சியினைக் காணத் தருகிறது.

காட்கிலின் துணைவியாரும் திருமகளாரும், தாயகத்துக்க வந்துற்ற கேட்டினை நீக்கிட, அறப்போர் நடத்திச் சிறைப்பட்டுள்ளனர்.

மராட்டியம், எவ்வளவு பூரிப்படையும்!

எனக்கா தளைகள்? ஏமாளிகளே, என்னையா அக்கிரமத் திட்டம் கொண்டு தாக்கத் துணிந்தீர்கள்! அதோ காணீர், என் கண்ணின் மணிகளை! வீராங்கனைகளை!! தாயும் மகளும்!! சிறையில் இருவரும்!! என் பொருட்டு, என்மீது வீசப்பட்டுள்ள வஞ்சக வலையை அறுத்தெரிய, வன்கணாளர் பூட்டிய தளைகளை நொறுக்கிட, தாயும் மகளும் சேர்ந்து சிறையில் புகுந்துள்ளனர். என்று கூறிப் பெருமை கொள்கிறது மராட்டியம்!

மராட்டிய மண்டலத்து மனைதொறும் மனைதொறும், தாயுடன் மகளும் சிறைபுக மாகாதையையன்றோ பேசிப் பேசி மகிழ்வர்!

கோழையும் வீரனாகாமலிருக்க முடியுமா?

காட்கில் காங்கிரஸ்காரர் - இன்னமும் காங்கிரசிலேதான் உறுப்பினர்.

கொடி தூக்கியாக மட்டுமல்ல, கோலோச்சும் நிலைமையும் பெற்றிருந்தவர், காட்கில்.

காட்கில், டில்லியில் அமைச்சராகப் பணியாற்றியவர் - ஆற்றல் மிக்கவர்.

அவர் ஓர் காங்கிரஸ்காரர் - ஆனால், தானோர் மராட்டியர் என்பதை மறக்க மறுக்கும் பண்பாளர்.

மராட்டியர் என்ற உணர்வு இருக்கிற காரணத்தால், மற்றையோர் மீது ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்ற மமதைக் கொள்கை கொண்டவரோ எனின், இல்லை, இல்லை. மராட்டியர் யாருக்கும் மண்டியிட மாட்டார், யாரும் அவர் முன் மண்டியிட்டுத் தாழ்ந்திடத் தேவையுமில்லை என்ற மாண்புமிகு நோக்கம் கொண்ட நேர்மையாளர்.

ஆளமட்டுமே காங்கிரசுக்குள் புகுந்து கொண்ட சேதுபதியோ என்று எண்ணிடாதே தம்பி, காட்கில், காங்கிரஸ் நடாத்திய கடும் போர்களில் ஈடுபட்டவர்.

இப்போதும் அவர் டில்லி தேவதைகளைத் தொழுதால் கேட்கும் வரம் பெற முடியும்.

வீரம், தீரம், அறிவு, ஆற்றல், சேவை, தியாகம்- எல்லாவற்றிலும் அவர் காமராஜர்களைக் காட்டிலும் பன்மடங்கு மேலானவர்.

ஆனால் காமராஜரால் ஆட்சியின் முதல்வராகத் திகழமுடிகிறது.

காட்கிலோ, மகளையும், துணைவியாரையும் சிறைச் சாலைக்கு அனுப்பிவைக்க வேண்டிய நிலையில் இருக்கிறார்.

காரணம், காட்கில் காமராஜராக மறுக்கிறார் - காங்கிரஸ்காரர் என்பதற்காக, தாயகத்துக்குக் கேடு செய்வோரைச் சளைக்காமல் சாடுகிறார் - குகைக்குள்ளே இருந்தபடியே சிங்கத்தின் பிடரியைப் பிடித்தாட்டுவது ஒன்று உண்டு - காட்கில்தான் அந்தப் பேச்சுக்குப் பொருள் கிடைக்கச் செய்தவர் - காங்கிரசில் இருந்து கொண்டே, காங்கிரஸ் பெருந் தலைவர்கள் நடாத்தும் காதகத் திட்டத்தைக் கண்டிக்கிறார்!

அவர், உள்ளே இருந்துகொண்டு போராடுகிறார்.

அவர் துணைவியாரும் திருமகளாரும், அறப்போர்க் களம் புகுந்து போராடி, சிறையில் வதிகிறார்கள்.

காவியம் புனையலாம், ஓவியம் தீட்டலாம், காணற்கரிய இக்காட்சி பற்றி - தாயும் மகளும் தாயக மானம் காக்க அறப்போரில் ஈடுபட்டுச் சிறைக்கோட்டம் சென்றது பற்றி!

இத்துணை எழுச்சி தரும் இச் சம்பவம், எதன் பொருட்டு? பம்பாய் நகரம் மராட்டியருக்கே சொந்தம்; அதனை மராட்டிய மாகாணத்துடன் இணைக்க வேண்டும்; வேறு வகையான ஏற்பாடுகள் எதனையும் மராட்டியம் ஏற்காது - என்ற நோக்கமே அறப்போருக்குக் காரணம்.

மராட்டிய மொழி பேசுவோர் உள்ள பகுதிகள் ஒரே இராஜ்யமாக்கப்பட்டு மராட்டிய மண்டலம் உருவாகிறது; அதிலே பம்பாய் இல்லை! இதற்கு, தாயும் மகளும் ஒரு சேரச் சிறை புகும் வீரச் சம்பவம் கொண்டதோர் அறப்போர் நடந்து கொண்டிருக்கிறது.

இங்கேயோ, காமராஜர் கேட்கிறார், தேவிகுளமும் பீர்மேடும் எங்கே இருந்தால் என்ன? அவை எங்கோ போயா விட்டன? நம்மிடம் இருந்தாலென்ன, மலையாள இராஜ்யத்தோடு இருந்தாலென்ன? என்று அறிவுரை கூறுகிறார்!

அந்தோ! திராவிடமே!! - என்று அலறித் துடித்து அழுவதா அல்லது ஐயா! அதிமேதாவியாரே! தேவிகுளமும் பீர்மேடும் எங்கே இருந்தாலென்ன என்று பேசுகிறீரே, காட்கில் குடும்பம், பம்பாய் எங்கிருந்தால் என்ன என்றா பேசுகிறது? மராட்டியருக்குச் சொந்தமான பம்பாயை, மராட்டியரிடம்தான் தர வேண்டும் என்று வாதாட காட்கிலும், போராடிச் சிறைபுக அவர் துணைவியாரும் மகளாரும் முன்வந்துள்ளனரே அறியீரா? என்று கேட்பதா, மேடாவது குளமாவது என்று பேசிடும் ஓர் மேதையை முதலமைச்சராகக் கொண்டோமே, நமக்கு இதுவும் வேண்டும் இதனினும் கொடியதும் வேண்டும் என்று நம்மை நாமே நொந்து கொள்வதா? என்ன செய்வதென்றே தெரியவில்லை!

வீர மராட்டியமே! ஒரு காலத்தில், கொடி கட்டி ஆண்டோம்! கொற்றம்

மாற்றாருக்கு ஈட்டியாக, உற்றாருக்குக் கேடயமாக இருந்து வந்தது! எமது புகழ் எங்கும் பரவிற்று! இன்று, எமக்கோர் காட்கில் இல்லை, - அம்மட்டோ! - எமக்கோர் காமராஜர் இருக்கிறார். அவருக்கு தேவிகுளம் போனாலும் பீர்மேடு போனாலும் கவலை எழாது, பதவிக்குத் துளி ஆட்டம் என்று தெரிந்தாலோ, தேசியக் கவலை - தேசியத் திகில் - கிளம்பி விடும் - மராட்டியமே! உன் மலைகளிலே தவழ்ந்து, மனைகளிலே புகுந்து மக்களை மாவீரராக்கும் வீரத்தை, உனக்குப் பயன்பட்டது போக, மீதி இருப்பதில், ஒரு துளியை, எமது மாகாண முதலமைச்சருக்கு அன்பளிப்பாக அளிக்கவல்லாயோ?- என்றெல்லாம் கேட்டிடத் தோன்றுகிறதல்லவா?

தம்பி! புனா, பம்பாய், ஷோலாப்பூர் - இங்கெல்லாம் சிறையில், மராட்டிய அறப்போர் வீரர்கள் அரசோச்சுகிறார்கள். அவர்களை "உள்ளே' அனுப்பிய ஆட்சியாளர்களை அச்சம் ஆட்டிப் படைக்கிறது.

மராட்டியத்துக்குப் பம்பாய் கிடைத்தாக வேண்டும் என்பதற்காக, மராட்டியத்திலே மட்டும் அறப்போர் நடைபெறவில்லை - மராட்டிய மாவீரர்கள், டில்லி சென்று இதற்காக அறப்போர் நடத்துகிறார்கள் - சிறைப்படுகிறார்கள்.

காமராஜரோ, டில்லி சென்று தேவிகுளம் இல்லையா? சரி! பீர்மேடும் இல்லையா? சரி! சரி! செங்கோட்டையில் பாதி வேண்டுமா? சரி! சரி! சரி!-என்று கூறிவிட்டு வருகிறார். காரணம் என்ன தெரியுமா, தம்பி, அவர் கூறுவது? தேசியம் அவருக்கு அவ்வளவு ததும்பி வழிகிறதாம்!! அதனால் தமிழ்நாடு என்ற பெயர் வேண்டாமாம். தமிழரின் உடைமை எது போனாலும் கவலையில்லையாம். உரிமை யாவும் டில்லிக்குப் போயிற்றென்றாலும் துயரமில்லையாம்!

இப்படி, டில்லி, ஒவ்வோர் வகையான அநீதி இழைக்கும் போதும், காமராஜர் ஆவலோடு, ஒரு உத்தரவாதம் கேட்டுக் கொள்வார் போல இருக்கிறது.

சரி! தேவிகுளம் தந்து விடுகிறேன், செங்கோட்டையும் கொடுத்துவிடுகிறேன். முதலமைச்சர் வேலை, என்னிடம்தானே? அதற்கு என்றும் ஆபத்து இல்லையே? - என்று கேட்டு, உத்தரவாதம் பெற்றுக்கொள்வார் போல இருக்கிறது.

அதனால்தான், உரிமை பறி போகும் போது, உடைமை கொள்ளைபோகும் போது, மக்கள் கோரிக்கை மண்ணாக்கப் படும்போது, சட்டசபைத் தீர்மானம் குப்பைக் கூடைக்குள் தூக்கி எறியப்படும்போது, சென்னை காங்கிரஸ் கமிட்டியின் முகத்தில் கரி பூசப்படும்போது - எத்தகைய இழிவு நேரிடும் போதும் - அதனாலென்ன? போனாலென்ன? குளமாவது மேடாவது! - என்று அவரால் பேச முடிகிறது.

வங்கம் செல்வோம் தம்பி! எங்கள் சிங்கம் சுபாஷ் சந்திரபோஸ் என்று கூறிக் காங்கிரஸ்காரர்கள் பூரிப்பது வழக்கமல்லவா, முன்பெல்லாம் - அந்தப் போஸ் ஜெனித்த தங்கத் தரணி செல்வோம்.

சிறைக் கதவுகளெல்லாம் திறக்கப்படுகின்றன!

வங்க மாதாகீ ஜே!-என்று வெற்றி முழக்கமிட்டபடி, அணி அணியாக வீரர்கள், விடுதலை பெற்று வெளியே வருகிறார்கள்.

சிறைத் தண்டனைக் காலம் முடிந்துவிட்டதால் வெளியே வருகிறார்கள் என்பதல்ல - எதற்காகச் சிறை சென்றார்களோ அந்த இலட்சியம் ஈடேறிவிட்டது - அவர்களைச் சிறையிலே தள்ளிய சர்க்காரே, வெட்கத்தால் வேதனைப்பட்டுக்கொண்ட நிலையிலேயே வெற்றி வீரர்களை விடுதலை செய்கிறது.

பத்தாயிரம் வீரர்களுக்கு மேல் ”விடுதலை’ பெற்று விட்டனர்; இன்னும் ஓரிரு ஆயிரவர், வெளியில் வரவேண்டுமாம்.

பீகாரும் - வங்கமும் இணைகிறது - என்றார், வங்க முதலமைச்சர்!

இதைக் கூற, ஒரு முதலமைச்சரா? கூறுவோர் ஒரு வங்கத்தவரா? எங்கே அவர்? அவர் திருமுகத்தைக் காண வேண்டும்! தாயகத்தை மறந்து, மக்களை மதியாமல் துரோபதையைப் பந்தயப் பொருளாக்கிச் சூதாடிய தருமன் போல, காட்டான் எவனோ கேட்டான் என்பதற்காக நாட்டைக் கொடுத்த மன்னன்போல, நேரு துரைமகனார், அந்த நேரத்தில் தோன்றிய ஒரு விருப்பத்தைக் கூற, அவருடைய ஆசையை நிறைவேற்ற, ஆங்கில அரசை முதன் முதலில் ஆண்மையுடன் எதிர்த்த வங்கத்தை, ஆயிரமாயிரம் வீரர்களைச் சிறைக்கனுப்பி, செந்தீயாகத் தேசியத்தை வளர்த்த வங்கத்தை

வெடி குண்டு வீசியேனும் வெள்ளையனை விரட்ட வேண்டும் என்ற அளவுக்கு விடுதலைப் போரார்வம் காட்டிய வங்கத்தை, காவலரும் நாவலரும் புகழத்தக்க கவிச்சக்கரவர்த்தியாம் தாகூரைத் தரணிக்குத் தந்த வங்கத்தை, எதிர்ப்புக்கு அஞ்சாச் சிங்கம், சுபாஷ் சந்திரபோஸ் பிறந்த வங்கத்தை, சுதந்திரச் சுடரொளியை, தனி நிலை, தனி ஆட்சி, தனி அமைப்பு இழந்திடச்செய்த, அந்த ”தர்மவான்' எங்கே இருக்கிறார், சற்றே காட்டுங்கள், பார்ப்போம்! எமது கண்களின் கேள்விகளுக்கு அந்தக் கருத்துக் குழம்பியவர் என்ன பதிலளிக்கிறார் கேட்போம்? - என்று சீறிக் கூறியபடி கிளம்பினர் வங்க வீரர்கள். 12,000 பேர் சிறைப்பட்டனர்!

பத்துப்பேர் சிறைப்பட்டிருந்தாலும் போதும், ஆங்கில ஆட்சியின்போது, பத்திரிகைகளிலே ஓலமும் ஒப்பாரியும், சூளுரையும் பக்கங்களை நிரப்பும்; படம் வெளிவரும்; பாடல்கள் கிளம்பும்; தலையங்கத்திலே தீப்பொறி பறக்கும்.

பன்னிரண்டாயிரம் அறப்போர் வீரர்கள் சிறை சென்றனர் - பத்திரிகைகள் பலமான இருட்டடிப்பு நடத்தி விட்டன.

ஒரு திங்களுக்குள் பன்னிரண்டாயிரம் பேர் சிறை சென்றுள்ளனர் - காமராஜர் மோட்டார் மீது வேறு ஏதோ மோட்டார் உராய்ந்தது பற்றிய செய்திக்குக் கிடைத்த இடம் கூட, இதற்குக் கிடைக்கவில்லை.

இருட்டடிப்புத்தான் செய்ய முடிந்ததே தவிர, வங்கத்தின் எழுச்சியையுமா அழித்திட முடிந்தது? முடிகிற காரியமா? வங்கத்தில், காங்கிரஸ் முதலமைச்சர் பொது நிகழ்ச்சிகளில் கலந்துகொள்வது கூட, ”விஷப்பரீட்சை'யாகி விட்டது.

யாராவது ஒரு கல்லூரி மாணவன் கண்ணில் முதலமைச்சர் பட்டுவிட்டால், தீர்ந்தது. துரோகியே திரும்பிப் போ! பதவியை ராஜிநாமாச் செய் என்று முழக்கம் எழுகிறது. வங்கமென்ன, காமராஜர்களைத் தாங்கிக் கொள்ளும் போக்கிலா இருக்கும்! இங்குதான் நமக்கு, எது பறிபோனாலும் பரவாயில்லை. எத்துணை நஷ்டம் ஏற்பட்டாலும் பரவாயில்லை, ஆட்சியில் அமர்ந்திருக்க ஒரு பச்சைத் தமிழர் கிடைத்தால் போதும் என்று கூறத் தலைவர்கள் இருக்கிறார்கள். வங்கம் அவ்விதமா இருக்கும்? கச்சையை வரிந்து கட்டிக்கொண்டு, கிளர்ச்சியில் ஈடுபட்டனர் - இப்போது இணைப்பு

கைவிடப்பட்டது என்று வங்க முதலமைச்சர், மக்களுக்குத் தெரிவித்துவிட்டார்; டில்லிக்கு அறிவித்துவிட்டார்!

இங்கே சேதுபதியும், கோவை நிதியும், பொன்னேரி உழவும் பிறவும், தமிழ்நாடு தனியாக இருக்கக் கூடாது - எதனுடனாவது, எப்படியாவது இணைப்பு வேண்டும் - தட்சிணப் பிரதேசம் வேண்டும் என்று பேசவும், யாரோ, எதையோ பேசிக்கொண்டு போகட்டும், முதல் மந்திரி நான்தானே? அதிலே ஒன்றும் தகராறு இல்லையே! ரொம்பச் சரி! - என்று மகிழ்ந்து கூறி, ஊர்வலம் நடாத்தும் காமராஜரும் உளர்! அவர்கள் நீண்ட நாவினராகவும் உளர்!!

எழுச்சி பெற்ற மராட்டியம், வெற்றி கண்ட வங்கம், இவை மட்டுமல்ல. நெரித்த புருவத்தை மாற்றிக்கொண்டு, நேரு துரைமகனார் நாகர்களுக்கு, புதுப்புது சலுகைகளும், சிறுசிறு உரிமைகளும் தருகிறேன் என்று பேரம் பேசிடக் காண்கிறோம்.

இங்கோ, டில்லியிடம் இடிபட்டும் இன உணர்வு துளியும் பெறாத ஒரு தமிழர், ”தமிழ்நாடு’ என்ற பெயரைச் சொன்னாலே தலையிறக்கமாக இருக்கிறது என்று தமிழகத்தில் பேசித் திரிகிறார் - அதற்கு அவருக்கு உரிமை இருக்கிறது என்கிறார் - காரணமும் காட்டுகிறார் அதற்கு - ஓட்டு, மக்கள் எமக்குத்தானே அளித்தனர் என்று கேட்கிறார் - இதுகள் தேர்தலுக்கு நின்றால் விடுவேனா, எனக்கென்ன அவர் இல்லையா? இவர் இல்லையா? என்கிறார் - இதைக் கூற ஊரூருக்கும் செல்கிறார்.

”ஓட்டு’ இவருக்கும் இவர் கட்சிக்கும் மக்கள் அளித்தார்கள், தம்பி, இல்லை என்பார் இல்லை; ஓட்டு அளித்தது எதற்கு?

”தொட்டதெல்லாம் பட்டுப்போகும் துரைத்தனம் நடத்தவா?

எடுத்ததற்கெல்லாம் டில்லிக்குக் காவடி தூக்கித் திரிவதற்கா?

தேக்கமும் அணையும் வடக்கே, சிறு பாசனத் திட்டம் தெற்கே என்ற ஓரவஞ்சனைக்கு வழிகோலவா?

அதிகாரமெல்லாம் டில்லிக்கே, நிதிக்குவியல் அங்கேயே, நிலைமை உயர்வது அவ்விடமே, கைகட்டி வாய்பொத்திக் கட்டியம் பார்ப்பது, திராவிடமே என்ற

இழிநிலை பெறவா?

செலவிடப் போகும் 6000 கோடியில், ஐயனே! எமை ஆளும் கோவே! அருள்கூர்ந்து 400 கோடியேனும் தாரும் என்று இங்குள்ள மந்திரிகள் கெஞ்சிக் கூத்தாட, என்ன துணிவு இவ்வளவு கேட்க? என்று மிரட்டி, 170 கோடி தருகிறேன் என்று கூறி, அதையும் குறைத்திட, இதையேனும் கொடுத்தாயே, இறையே போற்றி! எமை ஆள அனுமதிக்கும் துரையே போற்றி! - என்று தோத்திரம் பாடிடும் துரைத்தனம் காணவா? எதற்காக ”ஓட்’ அளித்தனர்.

தேம்பும் தமிழனைத் தேற்றிட ஆற்றலின்றி, வேதனையில் உழல்பவனைக் கவனிக்க மனமின்றி, விலைவாசி விஷமென ஏறினாலும், பண்டங்கள் பாதாளச்சிறை புகுந்தாலும், பாட்டாளி பதைபதைத்தாலும், எதற்கும் கவலை செலுத்தாமல், “கனம்’ ஆகிக் காலந்தள்ளும்”கண்ராவி‘க் காட்சி காணவா ”ஓட்’ அளித்தனர்?

தடியடியும் சிறையும், துப்பாக்கிப் பிரயோகமும் நடாத்திக் கொண்டு, எதிர்ப்புகளை நசுக்கிடும் எதேச்சாதிகாரம் காணவா ”ஓட்’ அளித்தனர்?

தமிழருக்குரிய “நிலத்தை’ இழந்துவிட்டு, தமது ஏமாளித்தனத்தை மறைத்துக்கொள்ளத் தமிழர் தமது உரிமையையும் உடைமையையும், மானத்தையும் மாண்பையும், மரபையும் கெடுத்துக்கொள்ள மறுக்கும்போது அவர்களைத் தாக்கிடும் போக்குடன் நடந்து கொள்கிறார்களே, இந்த நிலை காணவா”ஓட்’ அளித்தனர்?

தம்பி! இவைகளையும், இவை தமக்கு மூலாதாரமாக அமைந்துள்ள தாயக விடுதலைப் பிரச்சினை பற்றியும், நாம் கூடிப் பேசிட, கண்டோர் வியந்திடும் வகையிலோர் மாமன்றம் எழும்பியுள்ளது, திருச்சியில்.

இரவு இப்போது பகலை அழைத்துப் பணியாற்றச் சொல்லிவிட்டு, ஓய்வு கொள்ளச் செல்கிறது - விடிகிறது, தம்பி.

இடியும் மின்னலும், மழையும் காற்றும், என்னையும் மாநாட்டு அலுவலைக் கவனித்துக்கொண்டு இங்குள்ள நம் தோழர்களையும் மிரட்டிக்கொண்டிருந்த நள்ளிரவில், உன்னைப் பற்றிய நினைவு வந்தது. மாநாட்டுக்கான இந்த அழைப்பினை எழுதத் தொடங்கினேன்! இதோ, இரயிலுக்குக்

கிளம்புவோர் ஏறிச்செல்லும் வண்டிகளின் ஒலி கேட்கிறது. உனக்காக - தம்பி - உற்சாகத்துடன் இங்கு மாநாட்டுக்கான எழிலை அளித்திட யாரார் பணியாற்றிக்கொண்டுள்ளனர் தெரியுமா...?....

இதேபோது, திருச்சியில் வேறோரிடத்தில் மதியழகனும் வில்லாளனும், மாநாட்டுக் கொட்டகையிலும் திருச்சி நெடுஞ்சாலையிலும் அமைக்கவேண்டிய வளைவுகளுக்கான, எழுச்சி உரைகளை, ஆய்ந்தறிந்து தயாரித்துக் கொண்டிருக்கிறார்கள்.

நாலு நாட்களாகவே, நாவலரும், திராவிடன் ஆசிரியரும், நமது கழகச் சட்டதிட்டத்தில் திருத்தங்கள் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளனர்.

அன்பிலும், பராங்குசமும், மணியும், ராபியும் - அவர்களுடன் கூடிப் பணியாற்றி என்னைக் குதூகலித்திடச் செய்யும் தோழர்களும், பம்பரமாய்ச் சுற்றுகிறார்கள்; பணியிலே தரமும் வகையும் வளருகிறது; இடையிடையே என் கோபத்தையும் தாங்கிக்கொள்கிறார்கள்; என்னை நன்றாக அவர்கள் அறிந்திருப்பதால், என் கோபத்தின் உட்பொருளை அவர்களால் உணர முடிகிறது; உணர முடிவதால், நமக்குத் தெரியாததா? இவன் யார், இது சொத்தை அது சோடை என்று கூற? விளக்கமிலாத வீணன் - என்று கூறி என்னை ஒதுக்கிடும் நிலையில் இல்லை. ஓடுகிறார்கள் - பாடுபடுகிறார்கள் - கொட்டும் மழை கண்டும், வீசும்பெருங்காற்றுக் கண்டும் நான் கிலிகொள்ளும் போது, அவர்கள் எனக்குத் ”தைரியம்’ ஊட்டுகிறார்கள்.

திருச்சி நகராட்சி மன்ற உறுப்பினரும், நமது கழகத் தோழருமான தோழர் நாகசுந்தரம் நற்பணியாற்றிக்கொண்டு வருகிறார். அவருடைய சீரிய முயற்சியால் மாநாடு சிறப்புப் பெறுகிறது. நகராட்சி மன்றம் நாவலருக்கு வரவேற்பளிக்கத் தீர்மானித்திருப்பது நாகசுந்தரத்தின் வெற்றிகளில் ஒன்று.

பழனி, அரசு, ராஜு, கருணா, மணி - ஓவியர்கள் பகலை இரவாக்கிக் கொண்டுள்ளனர். இளமுருகு - இத்துறைக்குப் பணியாற்ற, பல்வேறு முயற்சிகளில் ஈடுபட்ட வண்ணமிருக்கிறார்.

லாரிகள் வந்துவிட்டன - என்றோர் மகிழ்ச்சிக் குரல் கேட்கிறது. என்னவென்று சென்று பார்க்கிறேன். நமது புரட்சி நடிகரின் மேற்பார்வையில் தயாரான

முகப்பு வந்து இறங்குகிறது. ஏ, அப்பா! என்னென்ன வளைவுகள்! என்னென்ன மாடங்கள்! எல்லாவற்றையும் பொருத்திக் கோத்து வண்ணமளித்தா லல்லவா தெரியும், எழில்! - என்று கூறுகிறார், சென்னை மாவட்ட மாஜி - கண்ணபிரான்

கொடிகளும் தோரணங்களும் தயாரிக்க, ஈரோட்டிலிருந்து அழகிய இரு வண்ணத் துணி மூட்டைகளை முன்னாலே அனுப்பிவிட்டு, தையற்கலையுடன் கழகப் பற்றை உடன் கொண்டுவரும் தேவராசன் என்பாரை உடன் அனுப்பி வைத்துவிட்டு, கரூர் தோழர் சோமுவையும், கூடுவதும் குறைவதுமாக உள்ள வயற்று வலியையும் உடன் அழைத்துக் கொண்டு வந்துள்ள சம்பத்து, மாநாட்டுத் தீர்மானம் குறித்து கவனித்து வருகிறான்.

ஒளியும் ஒலியும் - வண்ணமும் வகையும் உள்ளதாக இருப்பதற்கான பொறுப்பை ஏற்றுக்கொண்டுள்ள ராபி, வண்டுபோல் சுற்றி, மலர்போல் முகம் காட்டி, தேன்போலப் பேசி விருந்தளிக்கிறார்.

விதானம் தேவையா? குளோப் லஸ்தர் தேவையா? என்ன வேண்டும், கொண்டுவந்து குவிக்கிறேன் - என்று கூறிக் குதூகலிக்கச் செய்கிறார் கண்ணதாசன்.

எல்லோரும் ஏதேதோ செய்து கொண்டிருந்தால், ”உண்டி’ப் பிரச்சினையை யார் ஏற்று நடத்துவது என்று கவனிக்காமலிருப்பதா - இதோ இராஜமாணிக்கம் எனும் ஆசிரியத் தோழரொருவரும், போளூர் சுப்பிரமணியமும் நீண்டநாள் உணவு விடுதி நடத்தி அனுபவம் பெற்றவர்கள் போலப் பணிபுரிகிறார்கள் - சுவையான பகுதி அவர்கள் பணியில் காணக் கிடப்பது. மறுவேளை சாப்பிட்டேயாக வேண்டும் என்ற ஆசையை உண்போர் கொள்ள முடியாதபடி செய்திடும் ”பாகமுறை” என்று, உணவு விஷயத்தில் உருசிகரமான பிரியம் உள்ளவர்கள் இங்கு பேசிக்கொள்கிறார்கள்! இந்தச் செலவே அதிகம்தான் என்று எச்சரித்தபடி இருக்கிறார் நமது பொதுச் செயலாளர்.

எல்லாம் பந்தலைப் பொருத்துத்தானே - என்று கண்ணால் கேட்டபடி, காற்றாடியாகக் காட்சிதரும் வானமா மலையும், பார்ப்பவர்கள்

மலைக்கவேண்டும், செலவுக் கணக்குப் பார்க்கும்போது நாம் ஐயோ இவ்வளவா என்று திகைத்திடும் நிலை கூடாது - இந்த முறையில், திட்டம் இருக்க வேண்டும் என்று பணியாற்றிக்கொண்டு வருகிற சாம்புவும், நமது மாநில மாநாட்டுக்கு ஆற்றிவரும் பணியின் வடிவம் மே 17, 18, 19, 20-ல் நீ, காணத்தானே போகிறாய். தம்பி! எத்தனை எழில் முகப்புகள் தெரியுமா?

ஏறத்தாழ நாலாயிரம் செலவில், இரவு பகலென்று பாராமல், நமது இயக்கப் பற்றுகொண்ட கலை வல்லோர் உழைத்து அமைத்து சென்னையிலிருந்து கொண்டு வந்திருக்கும், முதல் முகப்பு அரண்மனை வாயில்போல் காட்சி தரும்.

அதில் நுழைந்து (கட்டணம் செலுத்தித்தான்!) உள்ளே வந்தால், தஞ்சை மாவட்டத்துக்கே தனிச் சிறப்பாக அமைந்துள்ள கீற்று அலங்கார முகப்பு, குத்தாலம் வேலைப்பாடுடன், உன்னை வரவேற்கும்.

இடையில், பட்டொளி வீசிப் பறந்திடும் கொடி, 50-அடி உயரமுள்ள "கம்பம்' தனில் காணக் கிடைக்கும்.

இப்புறம் சென்றால், அலங்கார வளைவு, அதிலே வள்ளுவப் பெருந்தகையின் வடிவம், காட்சி தரும் - எதிர்ப் புறமோ சிறியதோர் மணி மாடம் எனத்தக்க அமைப்பிலே, புத்தர்!

வள்ளுவரைக் கண்டு மகிழ்ந்து, அவ்வழி சென்றால் ஒவியக்காட்சி, உள்ளத்தை மகிழச் செய்யும் - அறிவுக்கு விருந்தாகவும் இருக்கும்.

கொடிமரத்தையும் குத்தால வேலைப்பாட்டினையும் கண்டான பிறகு, மேலால் சென்றால், தம்பி, மூன்றாவது முகப்பு காண்பாய்! ஆங்கு, விலங்கொடித்த விடுதலை வீரன், எழுச்சியூட்டி உன்னை வரவேற்கும் காட்சி உண்டு! மேலால் நடந்தால், போகப்போக வளர்ந்துகொண்டே போகும் - நான்கு அலங்காரத் தூண்களும், ஆற்றலை விளக்கும் அரிமா பதுமைகளும், பிறை வடிவான மேடைக்கு அழகளிக்க, மேலே இருந்து சின்னாளப்பட்டி வண்ண ஆடை திரையாகி, கண்ணைக் கவரும் - அங்குதான், கழகத் தோழர்கள் புடைசூழ, நமது நாவலர் வீற்றிருப்பார் - அழகு தமிழில், ஆற்றல் உண்டு என்பதை எடுத்துக் காட்ட!

ஒரு கிழமையாக அவருடன் இடைவிடாது உரையாடும் வாய்ப்பும் பெற்றதால், என் நண்பர் இராஜகோபால் அல்லவா கேட்கிறார், எனக்கென்று ஒரு வேலை தாருங்கள்! இவ்வளவுபேர் வேலை செய்யும்போது நான் மட்டும் வாளா இருப்பதா? என்று கேட்கிறார்! திராவிடத்திலே, புதியதோர் எழுச்சி என்று கூறினால் ஏது என்று கேட்கிறார்களே சிலர் - அவர்கள் இந்தக் காட்சிகளைக் கண்டாலல்லவா புரியும்! அவர்களின் கண்களும் அகலத் திறந்திடும் முறையில், தம்பி, இலட்சக்கணக்கிலே திரண்டிட வேண்டுமல்லவா திராவிடர்கள்.

அனைவருக்கும் கூறி, அழைத்துக்கொண்டு வரத்தான் போகிறாய்; உனக்கில்லையா அந்த ஆர்வமும், பொறுப்பும்!

போ, தம்பி, எதை எழுத, எதை எழுதாமலிருக்க - கரமும் வலிக்கிறது, காகமும் கரைகிறது. சுருக்கமாகக் கூறி விடுகிறேன், திராவிடத்தின் எழுச்சி எத்தகையது என்பதைக் காமராஜர்களும் உணர வேண்டும் - மாநில மாநாட்டு வெற்றி மூலம்.

அந்த வெற்றியைத் தேடித் தரும் ஆற்றல் உனக்கு உண்டு என்பதால்தான், மண்டியிட மறுத்து வீரப் போரிடும் மராட்டியத்திலே, தாயும் மகளும் சிறை சென்ற காட்சியையும் வெற்றிபெற்ற வங்கத்தில் வீரர்கள் விடுதலை பெறுவதையும் காணச் சென்றோம்; கண்டோம்; இனி மாநில மாநாட்டிலே கூடுவோம்; மகத்தானதோர் எழுச்சி, திராவிடத்திலே என்பதை அனைவரும் அறிந்திடச் செய்வோம்; தாயக விடுதலைக்காகப் பணியாற்றிடும் தகுதியும் திறமையும் நமக்கு உண்டு என்பதை மே 17, 18, 19, 20 நாட்களில் மேதினி அறிந்திடச் செய்வோம்; மெய் வருத்தம் பாரார், பசி நோக்கார், கண் துஞ்சார், தூற்றலுக்கும் தாக்குதலுக்கும் கலங்காதவர் நாம் என்பதைக் காட்டிட, நமக்கெல்லாம் ஓர் நல் வாய்ப்பு - ஆமாம், தம்பி! அனைவருக்கும் கிடைக்கக்கூடியதல்ல, இத்தகைய வாய்ப்பு. நாடு, நம்மிடம் நிரம்ப எதிர்பார்க்கிறது - நல்லோர் நம்மிடம் நிரம்ப நம்பிக்கை கொண்டுள்ளனர்; நாம் அதற்கு ஏற்றவண்ணம் நடந்துகொண்டு, வெற்றி முரசு கொட்டிட வழி காண்போம் வா; ”மன்றம்’ நடத்தும் நாவலர் கூட்டும் மாமன்றம்தனிலமர்ந்து, அறச்சாலையிலமர்ந்து பணியாற்றி

வாழ்க! வாழ்கவே!
வளமார் எமது திராவிட நாடு வாழ்க!
வாழ்கவே!!

என்ற பண் பாடிட வாராய்.

அன்பன்,
அண்ணாதுரை
13-5-1956

# FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை “யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்” என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது “Creative Commons” எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் “All Rights Reserved” எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Com-

mons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை “மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்
2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்
3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும்

பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஒர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

<துவக்கம்>

உங்களது வலைத்தளம் அருமை [வலைதளத்தின் பெயர்].

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM

FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

</முடிவு>

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை- http://kaniyam.com/foundation

## கணியம் அறக்கட்டளை




### தொலை நோக்கு – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

### பணி இலக்கு – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

### தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com/
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

### கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

**அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்**

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்

- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**

**Account Number : 606 1010 100 502 79**

**Union Bank Of India**

**West Tambaram, Chennai**

**IFSC – UBIN0560618**

**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**




BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.